# எங்கள் தமிழ்க் கோவை

(முதற் புத்தகம்)

## சிறப்புப் பகுதி


தொகுப்பு ஆசிரியர் :

**உயர்திரு. T. S. அருணாசலம் பிள்ளை, B.A., L.T.**

தலைமை ஆசிரியர், போர்டு ஹைஸ்கூல், நாச்சியார் கோயில், தஞ்சை ஜில்லா.

**உயர்திரு. N. நஞ்சப்பா M.A., B.O.L., L.T**

தலைமை ஆசிரியர், போர்டு செகண்டரி ஸ்கூல், பாப்பிரெட்டிபட்டி, சேலம் ஜில்லா

**உயர்திரு. வித்துவான் G. சந்திரமௌலீஸ்வரன்**

தமிழ் ஆசிரியர்,

லண்டன் மிஷன் ஹைஸ்கூல், சேலம்.



**விந்தியா வெளியீடு**

**1/1, பெரியண்ண மேஸ்திரி தெரு.**

**சென்னை—1.**





[விலை 12 அணா

# முன்னுரை

**'எங்கள் தமிழ்க் கோவை'** என்னும் பெயரோடு வெளிவரும் இக்கோவை நூல்கள் உயர்நிலைப் பள்ளிகளில் நான்கு - ஐந்தாம் படிவங்களில் பயிலும் மாணவர்களுக்குப் பாட நூல்களாக அமைவதற்குரியனவாகும். மண்டலமொழி முதன்மொழியாக்கப் பட்ட பின்னர், அந்நிலைக் கேற்ப அரசியலாரால் அண்மையில் வெளியிடப்பட்ட பாடவியலை நன்கு ஆராய்ந்து முற்றிலும் அதற்கு ஒத்த முறையில் இவை தொகுக்கப்பட்டுள்ளன.

மாணவர்களின் நன்மையைக் கருதியும், ஆசிரிய அறிஞர் பலர் ஆலோசனைக்கு இணங்கியும் பொதுப் பயிற்சிக்குரிய பகுதியும், சிறப்புப் பயிற்சிக்குரிய பகுதியும் தனித்தனி வெவ்வேறு புத்தகங் களாக வெளியிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு பகுதியிலும் அவ்வப் பகுதிக்கெனப் பாடவியலில் குறிக்கப்பட்டுள்ள அளவினும் சிறிது மிகுதியாகவே செய்யுட்களும் உரை நடைப் பாடல்களும் சேர்க்கப் பட்டுள்ளன. ஆசிரியர்கள் தங்கள் விருப்பத்திற்கும் மாணவர் களின் தகுதிக்கும் ஏற்பப் பாடங்களைத் தெரிந்தெடுத்துக்கொண்டு நடத்துவதற்கு இடமிருக்கவேண்டும் என்பதற்காகவே அவ்வாறு செய்யப்பட்டுள்ளது. செய்யுட்களுக்கு விளக்கமான குறிப்புரையும் உரைநடைப் பாடங்கட்குப் பயிற்சி வினாக்களும் தரப்பட்டுள்ளன. அவற்றின் துணைகொண்டு மாணவர்கள் பொருளுணர்ச்சியும் மொழிப் பயிற்சியும் பெறலாம்.

இவ்வாறு பலவகையாலும் மாணவர்கட்குப் பெரும்பயன் தருவதாக வெளிவரும் இக் 'கோவை' நூல் வரிசையை ஆசிரியர் களும் அதிகாரிகளும் விரும்பி ஏற்று ஆதரவு நல்குவர் என நம்புகின்றோம்.

இந்நூல்களைத் தொகுப்பதிலும், பதிப்பிப்பதிலும் உடனிருந்து உதவிய திருவாளர்கள், **வித்துவான், ம. வி. இராகவன், வித்துவான் எஸ். இலக்குமண சர்மா** ஆகிய அன்பர்கட்கு எமது அகங்கெழுமிய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். தங்கள் செய்யுட் களையும் கட்டுரைகளையும் இக்'கோவை' வரிசையில் கோத்துக் கொள்ள இசைவு தந்த அறிஞர்கள் அனைவருக்கும் எமது நன்றி உரியதாகும்.

**தொகுத்தோர்.**

# உள்ளுறை

## செய்யுள்



## உரை நடை

# எங்கள் தமிழ்க் கோவை

## முதற் புத்தகம்

## சிறப்புப் பகுதி

---

## செய்யுள்

### I. கடவுள் வாழ்த்து

#### 1. நற்றிணை

மாநிலஞ் சேவடி யாகத், தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கையாக,
விசும்புமெய் யாகத், திசைகை யாகப்,
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக,
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப,
தீதற விளங்கிய திகிரி யோனே. 1

—பாரதம் பாடிய பெருந்தேவனார்.

#### 2. குறுந்தொகை

தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித், திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக், குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்,
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்று லுலகவே.

—பாரதம் பாடிய பெருந்தேவனார்.

### குறிப்புரை

குறிஞ்சி முதலாகிய ஐவகை நிலத்திற்கும் உரிய சிறந்த ஒழுக்க முறையை விளக்கிக் கூறுவதால் இந் நூல் நற்றிணை எனப் பெற்றது. சங்கப் புலவர்கள் பாடிய தொகை நூல்கள் அடங்கிய எட்டுத் தொகையில் இது முதலாவது. எட்டுத் தொகையில் அடங்கிய நூல்கள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு. புறநானூறு என்பன.

நற்றிணையில் திருமால் வாழ்த்தாக அமைந்த இச் செய்யுளை இயற்றியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்பவர்.

### அருஞ்சொற்கள்

சேவடி —(செம்மை + அடி.) சிவந்த அடிகள், தூநீர் வளைநரல் பௌவம் — தூயநீரையுடைய சங்குகள் ஒலிக்கின்ற கடல், உடுக்கை — ஆடை, விசும்பு — ஆகாயம், சுடர் — சூரியன், இயன்ற எல்லாம் — அமைந்த எல்லா உயிர்களிடமும், பயின்று — பொருந்தி, திகிரி — சக்கராயுதம்.

### குறிப்புரை

குறுந்தொகை — இது எட்டுத் தொகையைச் சேர்ந்த நூல்களுள் ஒன்று. குறுகிய அடிகளையுடைய பாக்களைக் கொண்டு தொகுக்கப்பட்டதால் இந்நூல் இப்பெயர் பெற்றது.

குறுந்தொகையில் முருகக் கடவுள் வாழ்த்தாக அமைந்த இச் செய்யுள் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் இயற்றப்பட்டது.

### அருஞ்சொற்கள்

தாமரைபுரையும் — செந்தாமரை மலரைப்போன்ற, காமர் — அழகிய, திகழ் ஒளி — விளங்குகின்ற ஒளி, குன்றி ஏய்க்கும் உடுக்கை — குன்றி மணியைப்போன்ற சிவந்த ஆடை, குன்றின் — கிரௌஞ்சம் என்ற பெயருள்ள மலையின், நெஞ்சு — நடுவிடம், பக — பிளவுபட, ஏமம் வைகல் — இன்பமுடைய நாட்களை, எய்தின்று - அடைந்துள்ளது.

### பயிற்சி

I விடை எழுதுக :—

(1) எட்டுத் தொகையைச் சேர்ந்த நூல்கள் எவை ?

(2) அவை எப்பொழுது இயற்றப்பட்டன ?

(3) வேத முதல்வன் யார்?

(4) கடவுளுக்கு அடியாகவும், உடுக்கையாகவும், கண்ணாகவும் அமைந்தவை எவை?

(5) முருகன் எத்தகைய திருவடிகளை உடையவன்?

(6) அவன் மேனியின் நிறம் யாது?

(7) அவன் வேலின் சிறப்பு யாது?

(8) குன்றிமணி எதற்கு உவமையாக வந்தது?

(9) முருகன் கொடி யாது?

(10) சேவலங் கொடியோன் காப்பதால் உண்டாகும் நன்மை யாது?

II (1) சேவடி, பசுங்கதிர், பயின்றகத் தடக்கிய, குன்றியேய்க்கும், சேவலங்கொடியோன்—இத்தொடர்களில் உள்ள சொற்களைப் பிரித்தெழுதுக.

(2) I தாமரை புரையும் காமர் சேவடி,

II பவழத் தன்ன மேனி,

III குன்றியேய்க்கும் உடுக்கை—இவ்வடிகளில் உள்ள உவம உருபுகளைக் காட்டுக.

# 2. அறவுரை

## 1. அறநெறிச் சாரம்

### நடு நிலைமை

காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே;-காய்வதன்கண்
உற்ற குணந்தோன்றா தாகும்; உவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும். 1

### தற்புகழ்தல் தகாது

'பலகற்றேம் யாம்!'என்று தற்புகழ வேண்டா;
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்
சிலகற்றார் கண்ணும் உளவாம், பலகற்றார்க்(கு)
அச்சாணி அன்னதோர் சொல். 2

### புறம் பழித்தல் இழிவு

முன்னின் ஒருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப் - பின்னின்(று)
இழித்துரைக்குஞ் சான்றோரை அஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலை. 3

### இளமையில் அறஞ்செய்தல்

இன்சொல் விளைநிலனா, ஈதலே வித்தாக,
வன்சொல் களைகட்டு, வாய்மை எருவட்டி,
அன்புநீர் பாய்ச்சி, அறக்கதிர் ஈன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். 4

### உண்மைச் சுற்றத்தார்

நல்லறம் எந்தை ; நிறைஎம்மை ; நன்குணரும்
கல்வியென் தோழன் ; துணிவெம்பி ;—அல்லாத
பொய்ச்சுற்றத் தாரும் பொருளோ பொருளாய
இச்சுற்றத் தாரில் எனக்கு ?

—முனைப்பாடியார்.

### குறிப்புரை

**அறநெறிச் சாரம்** என்ற தொடர் தருமவழிகளுட் சாரமானவற்றைக் கூறும் நூல் எனப் பொருள்படும். திருக்குறள் முதலிய நீதி நூல்களின் சாரங்களும், ஜைநசமய நூல்களில் கூறிய சன்மார்க்கங்களின் சாரங்களும் இதில் அடங்கியுள்ளன. இதில் 226 வெண்பாக்கள் உள்ளன.

இந்நூலை இயற்றியவர் **முனைப்பாடியார்**. இவர் திருமுனைப்பாடி நாட்டினர் என்பர். இவர் ஜைந மதத்தினர். சுமார் 500 ஆண்டுகட்கு முன்னர்த் திரட்டப்பட்ட **புறத்திரட்டு** என்னும் நூலில் இவருடைய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஆதலால் இவர் காலம் இற்றைக்கு ஐந்நூறு வருடங்களுக்கு முந்தியதென்று தெரிகிறது.

### அருஞ்சொற்கள்

1. காய்தல் - வெறுத்தல், உவத்தல் - மகிழ்தல், ஆய்தல் - ஆராய்தல், உற்ற - பொருந்திய.

2. தன் + புகழ = தற்புகழ, அலர் கதிர் ஞாயிற்றை - பரந்த கிரணத்தையுடைய சூரியன், அச்சு ஆணி - (தேர் முதலியவற்றின்) கடையாணி.

3. கல் நின்று உருக - நின்ற கல்லும் உருகும்படி, கலந்து - மனங்கலந்து, இழித்து உரைக்கும் - இகழ்ந்து பேசும், சான்றோரை - குறிப்பு மொழி (புறங் கூறுவோராகிய கயவரைக் குறித்தது), இமையார் - கண்களை மூடித் திறவாதவராய் (தேவர்கள் கண்கள் இமைப்பதில்லை என்பது ஈண்டறியத்தக்கது), இது **தற்குறிப்பேற்றம்**.

4. கட்டு - பறித்து, அட்டி - சொரிந்து, கதிர் - நெற்கதிர், பைங்கூழ் - பசுமையான பயிர், சிறுகாலை - இளவயதிலே.

5. எந்தை - எம் தந்தை (மரூஉ), எம்மை - எம் தாய், எம்பி - எம் தம்பி.

**பயிற்சி**

1. பொருள் கூறுக :—

காய்தல், அச்சாணி, பைங்கூழ், சிறுகாலை, நிறைய.

2. விடைதருக :—

1. நடுநிலையாளர் குணம் யாது?
2. ஒருபொருளை, காய்தல் உவத்தல் அகற்றி ஆயவேண்டுவது ஏன்?
3. தற்புகழ்ச்சி ஆகாது என்பது எவ்வாறு விளக்கப்பட்டுள்ளது?
4. தேவர் கண்ணிமையாமைக்கு கூறப்பட்டுள்ள காரணம் யாது? அங்ஙனம் கூறியதன் கருத்து யாது?
5. சிறுகாலையில் செய்யவேண்டிய பயிர் யாது?
6. மெய்ச்சுற்றத்தார் யாவர்?

## 2. திருக்குறள்

### இனியவை கூறல்

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 1

அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின். 2

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானும்
இன்சொ லினதே யறம். 3

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉ மின்சொ லவர்க்கு. 4

பணிவுடைய னின்சொல னாதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற. 5

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி யினிய சொலின். 6

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல். 7

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையு மின்பந் தரும். 8

இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. 9

இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 10

—திருவள்ளுவர்.

## 3. நான்மணிக்கடிகை

கள்ளி வயிற்றில் அகில்பிறக்கும் : மான்வயிற்றில்
ஒள்ளரி தாரம் பிறக்கும் : பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் : அறிவார்யார்
நல்லாள் பிறக்குங் குடி ? 1

கண்ணிற் சிறந்த உறுப்பில்லை ; கொண்டானின்
துன்னிய கேளிர் பிறரில்லை ; மக்களின்
ஒண்மையவாய்ச் சான்ற பொருளில்லை ; ஈன்றாளோ
டெண்ணக் கடவுளு மில். 2

—விளம்பி நாகனார்

### குறிப்புரை

*இதனை இயற்றியவர் திருவள்ளுவர். இவர் வள்ளுவக் குடியைச் சேர்ந்தவர். இக்குடியினர் படையெழுச்சி, திருவிழா, திரு*

மணம் என்னும் விசேட காலங்களில் முரசினை யானை மேல் ஏற்றி, அறைந்து, அரசனது ஆணையைத் தெரிவிப்பர். இந் நூலிற்குப் பரிமேலழகர் எழுதிய உரையே யாவராலும் சிறப்புடைய தாகக் கருதப்பட்டு வருகிறது.

## அருஞ் சொற்கள்

இனியவை கூறல்: மனத்தில் உள்ள உவகையை வெளியே புலப் படுத்தும் இனிய சொற்களைச் சொல்லுதல்.

1. ஈரம் அளைஇ — அன்பொடு கலந்து, படிறு-வஞ்சனை, செம்பொருள் - அறம்.

2. அமர்ந்து - உவந்து.

4. துவ்வாமை - நல்குரவு, வறுமை.

5. பிற - உடம்பிற் கணிந்துகொள்ளும் பிற அணிகள்.

6. அல்லவை - பாவங்கள்.

7. நீதி - உலகத்தோடு பொருந்துதல். பண்பு - இனிமைப் பண்பு.

8. சிறுமையுள் நீங்கிய இன்சொல் - பொருளால் பிறருக்கு நோய் செய்யாத இனிய சொல்.

9. கடுஞ்சொல் பிறர்க்கும் இன்னாது.

10. கனிகளென்றது ஔவையுண்ட நெல்லிக் கனி போல அமிழ்தானவற்றை, இன்னாத காய்களென்றது காஞ்சிரங்காய் போல நஞ்சானவற்றை.

## குறிப்புரை

இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று. நான்கு நான்கு இரத்தினத்துண்டு (கடிகை - துண்டு) போன்ற நான்கு உயர்ந்த பொருள்கள் ஒவ்வொரு பாடலிலும் சொல்லப்பட்டிருப் பதால் இந் நூல் இப்பெயர் பெற்றது. இதன் ஆசிரியர் விளம்பி நாகனர்.

## அருஞ்சொற்கள்

1. கள்ளி வயிற்றில் - கள்ளி மரத்தினுள், அகில் - அகிற் கட்டை, அரிதாரம் - கஸ்தூரி, பல் விலைய - மிக்க விலையுள்ள, நல் ஆள் - நற்குண நற்செயல்களை உடையவன்.

2. கொண்டான் - கணவன். கேளிர் - உறவினர். ஈன்ருள் - தாய்.

விடை கூறுக :—

1. இனியவை கூறலைப் பற்றி ஆசிரியர் கருத்துக்களைத் தொகுத்து வரைக.

2. நல்லாள் பிறக்கும் குடியை ஏன் அறிய முடியாது ?

3. சிறந்த உறுப்பு, துன்னியகேளிர், சிறந்த பொருள், கடவுள் — இவை யாவை ?

## 4. புறநானூறு

உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே ;
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் ருயுமனந் திரியும் ;
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்ரு தவருள்
அறிவுடை யோனு றரசுஞ் செல்லும் ;
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே.

—பாண்டியன் ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன்

### குறிப்புரை

சங்க காலத்தில் இயற்றப்பட்ட நூல்களுள் 'புறநானூறு' என்பது ஒன்று. இது புறப்பொருளைப் பற்றிக் கூறும் 400 செய்யுட்களை உடைய நூலாதலால் இப்பெயர் பெற்றது. இது பழந் தமிழர் நாகரிகத்தினைப் பற்றிக் கூறும்.

### அருஞ் சொற்கள்

உற்றுழி - (தம் ஆசிரியருக்கு) ஓர் இடையூறு வந்த சமயத்தில். உறுபொருள் - மிக்க பொருள். பிற்றை நிலை - வழிபாட்டு நிலைமை. முனியாது - வெறுக்காது, ஆறு - வழி.

**பயிற்சி**

விடை கூறு.—

1. *பண்டைக்காலத்தில் கல்வியை எவ்வாறு கற்றனர்*
2. *மக்கள் ஏன் கற்க வேண்டும் ?*

# III. காதை

## 1. குசேலோபாக்கியானம்

**அவந்தி என்னும் அழகிய நகரில், சுதாமா என்னும் பெயர் பூண்ட குசேலமுனிவர் என்பார் ஒருவர் இருந்தனர். அம்முனிவர் பெருமான்,**

அடக்கமும் பொறையும் கருணையும் நண்பும்
அழுக்கறுத் திலாமையும் என்றும்
விடற்கருந் தவத்தோ டொருங்குற வளர்ப்போன் ;
வெகுளியும் காமமும் மயக்கும்
கடக்கரும் தீமை நாடொறும் விளைக்கும்
கயவர்கள் தொடர்ச்சியும் நன்னைத்
தொடற்கரி தாக வடியறக் காய்ந்தோன் ;
தூயர்க்கும் தூயவன் மாதோ.

**கிழிந்த கந்தையை நல்லுடையாகப் புனைந்திருந்தனராதலின் அவரைக் குசேலர் என்று பெயரிட்டழைத்தனர். அம்முனிவர் மனைவி,**

மாசிலாக் குலத்து வந்தாள் ;
வருவிருந் துவப்ப ஊட்டும்
நேசமிக் குடையாள் ; கொண்கன்
நினைப்பறிந் தொழுகு நீராள் ;
தேசுறு வாய்மை யுள்ளாள் ;
சினந்திடல் என்று மில்லாள் ;
பேசுதிண் கற்பு வாய்த்தாள்.
பெற்றதே கொண்டு வப்பாள். 2

**இவர்கட்கு இருபத்தேழு குழந்தைகள் பிறந்திருந்தன. முனிவரர் என்செய்வார்! சிறுவர்கட்கு உணவு வேண்டும்.**

**இரந்து பொருள்தேடி இளைஞர்களை ஊட்டி வளர்க்க அவர் மனம் இசையவில்லை. அவர்,**

பல்லெலாம் தெரியக் காட்டிப்
பருவரன் முகத்திற் கூட்டிச்
சொல்லெலாம் சொல்லி நாட்டித்
துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலாம் அகல ஓட்டி
மானமென் பதனை வீட்டி
இல்லெலாம் இரத்தல்—அந்தோ!—
இழிவிழி வெந்த ஞான்றும். 3

**என்ற சிறந்த கொள்கையை உடையவர். ஆனால், குழந்தை களுக்கென்ன தெரியும்! பாவம்! தாயைப் படாத பாடும் படுத்தின. அவள், உணவெடுத்து,**

ஒருமகவுக் களித்திடும்போ தொருமகவு
கைநீட்டும்; உந்தி மேல்வீழ்ந்
திருமகவும் கைநீட்டும்; மும்மகவும்
கைநீட்டும்; என்செய் வாளால்!
பொருமியொரு மகவழும்; கண் பிசைந்தழுமற்
றொருமகவு; புரண்டு வீழாப்
பெருநிலத்திற் கிடந்தழுமற் றொருமகவெவ்
வனஞ்சகிப்பாள்! பெரிதும் பாவம்! 4

'குண்டலமோ திரம்கடகம் சுட்டி, அயன்
மனையார்தம் குழவிக்கிட்டார்;
புண்டரீ கக்கண் அன்னாய்! எனக்குநீ
இடாதிருக்கும் பொருமை என்னே!
கண்டெடுத்திப் போதி' டெனக் கரைமதலைக்
கில்லாதான் கடன்தந் தானுக்
கெண்டபச்சொல் வார்த்தையென 'நாளைக்கு
நாளைக்'கென் றியம்பிச் சோர்வாள். 5

**ஒரு நாள் அக்கற்பரசி முனிவரின் பாதங்களைத் தொழுது மிகவும் பணிவுடன்,**

'தரித்திரம் மிக்க வனப்பினை ஒடுக்கிச்
சரீரத்தை உலர்தர வாட்டும்;

தரித்திரம் அளவாச் சோம்பலை எழுப்பும்;
சாற்றரும் உலோபத்தை மிகுக்கும்;
தரித்திரம் தலைவன் தலைவியர்க் கிடையே
தடுப்பரும் கலாம்பல விளைக்கும்;
'தரித்திரம் அவமா னம்பொய்பே ராசை
தரும்; இதிற் கொடியதொன் றிலையே. 6

'யாதவர் குலத்திற் றேன்றிய அரசர்
யாவர்க்கும் அதிபனும் இணையில்
மாதவ னுடன்நீ பலகலைக் கடலை
வாய்மடுத் தனையென வகுப்பார்.
ஆதலின் அப்பீ தாம்பரன் மருங்கில்
அணைந்தவன் பாற்பெரும் செல்வம்
நீதறக் கொண்டு கொடுத்துநம் சிறுவர்
செல்லல்நோய் தவிர்க்குதல் வேண்டும்'. 7

**என்று வேண்டினாள். குசேலர்,**

'சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுள்ளார் மூக ராவர்!
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்;
குறிபெறு கண்ணு ளாரும் குருடராய் முடிவ ரன்றே! 8

'பல்கதிர் விரித்துத் தோன்றிப் பாடுசெய் கதிரே போல
மல்லனீர் உலகிற் றேன்றி மறைந்திடும் நும்மை விட்டுச்
செல்வமென் றுறுவ தற்குச் செல்வமென் றுரைக்கும் பேர்நன்
றல்லலை விளைப்ப தாகா தரும்பெறற் செல்வம்; பாவாய்! 9

'முன்னமெத் தனைபேர் மைந்தர்
முறைமைபா ராட்டி னரோ?
இன்னமெத் தனைபேர் மைந்தர்
முறைகொள இருக்கின் றரோ?
அன்னமைந் தரைத்தம் மைந்தர்
எனல்அறி யாமை யாகும்.
மென்னடைக் கரிய வாட்கண்
விரைக்கருந் தாழ்கு ழாலே? 10

**அன்றியும்,**

'மதலையைப் பெறுநாள் துன்பம் ;
வளர்த்திடு நாளும் துன்பம் ;
விதலைநோய் அடையில் துன்பம் ;
வியன்பரு வத்தும் துன்பம் ;
கதமுறு காலர் வந்து
கைப்பற்றில் கணக்கில் துன்பம்
இதமுறல் எந்நாள் சேயால் ?
எற்றைக்கும் துன்ப மானல் ! 11

" அத்தகு மைந்தர் ஆர்?" நீ
யார் ? இஃ துரைக்கும் நானுர் ?
இத்தரை யிடைக்காப் பாற்றற்
கியான்திரு நெடுமா லல்லன் ;
கொத்துறு மைந்த ராசைக்
கோட்பட்டு வருந்து கின்றாய் ;
பித்துளார் செய்கை யீது,
பெரியார்இம் மயக்கம் பூணுர். 12

'பாற்கட லடுத்த மீன்அப் பால்விரும் பாது மற்று
ஏற்குமா விரும்பி ஞற்போல் எம்பிரரன் திருமுன் சார்ந்து
நாற்கதி கடக்கும் இன்பச் செல்வத்தை நண்ணி டாமல்
சேற்கருங் கண்ணுய்! துன்பச் செல்வமோ நண்ணு வேன்யான்?

'நன்றியில் உடலைப் போற்றல் நன்றுளார் செய்கை யன்று ;
வன்றிகள் மலத்த ழுந்தி மாசுகம் என்றுற் போல, [யான்'
ஒன்றும்இக் குடும்பச் சேற்றில் உழன்றிடேன் உழன்றி டேன்
என்றுரைத் திறுத்தான் பற்றில் இருந்தவ ரேறு போல்வான். 14

**அப்பொழுது அவர் மனையாள்,**

'செயத்தகு முயற்சி செய்திடில், செயிர்தீர்
செய்யவள் மணாளனும் இரங்கி
வியத்தக வேண்டும் யாவையும் அளிப்பன் ;
விளம்புறு முயற்சிசெய் யானேல்,
நயத்தகு போகம் அளித்திடான் என்று
நானிலத் தறிஞர்நன் குரைப்பர் ;
உயத்தகு நெறிமா லடிஉன லொன்றே
ஓர்ந்தமா தவப்பெருங் கடலே ! 15

'மடமையேன் தனக்குக் கடவுளும் நீயே;
வகுக்கரும் இறைவனும் நீயே;
அடலுறு தானம் தவமுதல் யாவும்
ஆற்றுநின் பணிவிடை யன்றோ?
'மடலவிழ் துளப மாலிகை புனைந்து
வாசுதே வன்பத மலரைத்
திடமுற நெஞ்சத் துன்னிவல் வினையைச்
சிதர்தரச் செகுத்தமா மறையோய்? 16

என்றாள்.

'தெய்வம், குரவன், அரசன் திருமுன்னர்ச் செல்வோர்
மெய்வந்த அன்னோர் அருள்வேண்டி விரும்பி தேனும்
கைவந்த பெற்றுச் செலீஇக் காண்குவர். கண்ணன்முன்பு
மைவந்த கண்ணாய்! இனிதென்கொடு; வல்லை செல்வல்.' 17

**என்றனர். அதுகேட்ட அவர் மனைவி, அன்று முதல் உபவாச மிருந்து நாள்தோறும் தன் பங்கு நெல்லைச் சேர்த்து, போது மான அளவு சேர்ந்தபின், அதனை நீரில் நனைத்து வறுத் தெடுத்து,**

கறையிட்டு நலிகாண உலக்கைகொடு
மிக்கிடித்துக் கரிசு போக்கி
நிறையிட்ட அவலாக்கிக் குசேலமுனி
கந்தையினில் நேடி யோர்பான்
மறையிட்ட ஒழுங்குடையாள் முடிந்துகொடுத்
தினிதுபோய் வருக' என்றாள்.
சிறையிட்ட பவநீங்கும் வழிகண்டோன்
வழிதேடிச் செல்ல லுற்றான். 18

—வல்லூர்த் தேவராசப் பிள்ளை.

## அருஞ் சொற்கள்.

*1. அழுக்கறுத்தல் இலாமை-பொறாமை இல்லாதிருத்தல்; விடற்கு அரும் - விடுவதற்கு அருமையான* **(விடக்கூடாத)**; *ஒருங்கு உற - ஒன்றாய்ப் பொருந்த; கடக்க அரும் - கடப்பதற்கு அரிதான; அடி அற - முற்றும் நீங்க; காய்ந்தோன் - வெறுத் தொழித்தவன்.*

2. உவப்ப - சந்தோஷிக்க ; கொண்கன் - கணவன் ; ஒழுகும் - நடந்துகொள்ளும் ; நீராள் - தன்மையுடையவள் ; தேசு உறு - அழகு பெருந்திய ; திண் - உறுதியுடைய.

3. பருவரல் - துன்பம் ; துணை கரம் - இரண்டு கைகளையும் ; மல் - வலிமை ; வீட்டி - அழித்து.

4. உந்தி - தாவி.

5. புண்டரீகம் - தாமரை ; இடு எலா - அணி என்று ; கரை - சொல்லும் ; எண் தப - (நாள்) எண்ணிக்கை கடத்த.

6. வனப்பினை - அழகை ; உலர்தர - காய ; அளவா - அளவில்லாத ; சாற்ற அரும் - சொல்ல முடியாத ; தடுப்ப அரும் - தடுக்க முடியாத ; கலாம் - கலகம்.

7. வாய்மடுத்தனை - குடித்தாய் ; வகுப்பார் - சொல்லுவார் ; பீதாம்பரம் - பொன்னுடை ; செல்லல் நோய் - துன்பப்பிணி.

8. உற்ற ஞான்றே - அடைந்தபொழுதே ; வறிய புன் செருக்கு - வீணான அற்ப கருவம் ; மூகர் - ஊமையர் ; பறி - பொன் (ஆபரணம்) ; பயில்தரு - பழக்கப்பட்ட ; குறிபெறு - குறித்துப் பார்க்கும் (சக்தியைப்) பெற்ற.

9. பாடு - பெருமை ; கதிர் - சூரியன் ; மல்லல்நீர் - வளப்பத் தன்மையுடைய ; அல்லல் - துன்பம்.

10. மெல் நடை - மென்மையான நடை ; வாள் கண் - வாள் போன்று பிரகாசிக்கும் கண்கள் ; விரை கரும் தாழ் குழலே - வாசனையுடைய கரிய தாழ்ந்த கூந்தலையுடையவளே.

11. விதலை - நடுக்கம் ; கதம் - கோபம் ; காலர் - யமனர் ; எற்றைக்கும் - என்றைக்கும்.

12. அத்தகு - அப்படிப்பட்ட ; கொத்தறு - கொத்திப் (பிடுங்குகின்ற) ; கோட்பட்டு - கொள்ளப்பட்டு.

13. ஏற்குமா - (தமக்கு) ஏற்றபடி ; நண்ணிடாமல் - அடையாமல்.

14. நன்றி இல் - நன்மை யில்லாத ; நன்று உளார் - நன்மை உள்ளவர்கள் ; வன்றி - பன்றி ; மாசுகம் - மிகவும் சுகமாயிருக்கிறது ; ஒன்றும்-பொருந்திய; இறுத்தான்-பதில் கூறினான் ; பற்று இல் பற்றில்லாத ; இரும் தவர் ஏறு - பெரிய தவத்தினருள் சிங்கம் (போன்றவன்).

*15,* செயிர்தீர் - குற்றமற்ற ; செய்யவள் - இலக்ஷ்மி; வியத்தக - ஆச்சரியப்படும்படியாக; நயத்தகு - விரும்பத்தகுந்த; உயத்தகு - உய்யத்தகுந்த; உனல் - கருதுதல், ஓர்ந்த - அறிந்த.

*16.* வகுக்க அரும் - சொல்லுவதற்கு அரிய; இறைவன் - தலைவன்; அடல் உறு - பெருமை பொருந்திய; ஆற்றும் - செய்யும்; மடல் அவிழ் - இதழ்கள் மலர்ந்த; மாலிகை - மாலை; சிதர்தர - சிதறும்படியாக; செகுத்த - வெட்டிய.

*17.* திருமுன்னர் - திருச்சமுகம்; அன்னூர் - அப்படிப்பட்டவர்கள்; கைவந்த-கைக்கு எட்டிய அளவு; செலீஇ-சென்று; இனிது என் - இனிய கையுறைப் பொருள் என்ன இருக்கிறது. கொடு - கொடுப்பாயாக. வல்லை - சீக்கிரம்; செல்வல் - செல்வேன்.

*18.* கறை—உரல்; நனி காண—அதிகம் காணும்படி; கரிசு—(உமி முதலிய) குற்றம்; நிறையிட்ட — உறுதியான ; தேடி — தேடி ; மறையிட்ட—வேதத்தில் கூறப்பட்ட.

## பயிற்சி

I. விடை எழுதுக:—

1. குசேலோ பாக்கியானம் யாரால் பாடப்பட்டது?
2. குசேலரின் இயற்பெயர் யாது ?
3. குசேலரின் நல்லியல்புகள் யாவை ?
4. குசேலருக்கு அப்பெயர் வரக் காரணம் யாது ?
5. அவர் மனைவியின் நல்லியல்புகள் யாவை ?
6. குசேலர் இரத்தல் இழிவு என்பதனை எவ்வாறு புலப்படுத்துகிறார் ?
7. குசேலர் மனைவி குழந்தைகளுக்குக் கஞ்சிவார்க்கும் பொழுது குழந்தைகள் என்ன செய்யும் ?
8. குழந்தைகள் தாயை என்னென்ன நகைகள் வேண்டுமெனக் கேட்கும் ?
9. தரித்திரம் ஏன் கொடியதாகும் ?
10. குசேலர் மனைவி அவரை யாரிடம் பொருள் பெற்று வருமாறு கூறினாள் ?
11. செல்வம் கொடியது என்று குசேலர் கூறக் காரணம் யாது ?

12. குழந்தைகளால் என்றைக்கும் துன்பம் என்பதைக் குசேலர் எவ்வாறு விளக்குகின்றார் ?
13. பித்துளார் செய்கை யீது — ஈண்டுக் குறிக்கப்பட்ட செய்கை எது ?
14. குசேலர் கண்ணனிடம் செல்வத்தைப்பெற முதலில் ஏன் விரும்பவில்லை ?
15. குசேலர் கண்ணனிடம் செல்வத்தைப்பெறப் பின்னர் இசைந்தது ஏன் ?
16. யார் யாரைக் காணும் பொழுது கையுறையுடன் செல்ல வேண்டும்?
17. குசேலர் எடுத்துச் சென்ற கையுறை யாது ?

## 2. மனோன்மணீயம்

**[சகடர் தம் மகளான வாணியைப் பலதேவனுக்கு மண முடித்துக் கொடுக்க விரும்பினார். பலதேவனை மணக்க வாணி விரும்பவில்லை. அவள் நடராஜனை விரும்பினாள். சகடர், தம் மகளுக்கு அறிவுரை கூறுமாறு பாண்டியனை வேண்டினார்.]**

### அங்கம் 1. களம் 3.

ஜீவகனும் சகடரும்

**ஜீவ :**

**(சகடரை நோக்கி)**
சுகமோ யாவரும் முதிய சகடரே !
மகிழ்வுற வும்மை நோக்கி வெகுநாள்
ஆயின தன்றே ?

**சகடர் :** ஆம் ! ஆம் ! அடியேன்

**ஜீவ :**

மேயின விசேடமென்? விளம்புதிர். என்குறை? 5

**சகட :**

அறத்தா றகலா தகலிடங் காத்துப்
பொறுத்ததோட் புரவல! உன்குடை நீழற்

பொருந்து மெங்கட் கரந்தையு முளதோ ?
சுகமீது காறும். அகமகிழ் வுற்றுன்
மந்திரத் தலைவன் குடிலன் மகற்கே
எந்தன் புதல்வி வாணியை வதுவையிற்
கொடுக்கவோ ராசை கொற்றவ ! மற்றது
முடிக்கநின் கருணையே முற்றும்வேண் டுவனே.

**ஜீவ** :

சீலஞ் சிந்தை கோல மனைத்துஞ்
சாலவும் பொருந்தும். சகடரே ! அதனல் 15
களித்தோம் மெத்த. ஏ ! ஏ ! குடில !
ஒளித்த தென்நீ யுரையா தெமக்கே ?

**குடில :**

ஆவ தாயி னறிவியா தொழிவனே !

**ஜீவ :**

இடையூ றென்கொல் ? இடியே றன்ன
படையடு பலதே வன்ரு னேதோ
விரும்பினன் போலும் வேறோர் கரும்பே !

**குடில** :

இல்லையெம் மிறைவ ! எங்ஙன முரைக்கேன் !
சொல்லிற் பழிப்பாம். சகடரே சொல்லுக.

**ஜீவ** :

என்னை ? சகடரே ! இடையூ றென்னை ?

**சகட :**

பரம்பரை யாயுன் றெழும்புபூண் டொழுகும் 25
அடியனேன் சொல்பழு தாயின தில்லை.
முடிவிலாப் பரிவுடன் வளர்த்தவென் மொய்குழல்
ஒருத்தியே யென்சொல் வியர்த்த மாக்குவள்.
ஒருதலை யாயிம் மணத்திற் குடன்படாள்.
விரிதலைப் பேய்போல், வேண்டிய விளம்பியும் 30
ஓரா ளொன்றும் ; உணரா ள் தன்னயம் ;
நேரா ளொருவழி ; பாராள் நெறிமுறை ;

என்னயான் செய்கேன்? இதன்மே லெனக்கும்
இன்னல் தருவதொன் றில்லை. தாதையர்
மாற்றங் கேளா மக்கள் கூற்றுவர் 35
எனுமொழி யெனக்கே யனுபவ மிறைவ!
உரைத்தவென் கட்டுரை பிழைத்திடப் பின்னுயிர்
தரித்திருந் தென்பயன்? சாவோ சமீபம்.
நரைத்த தென்சிரம்; திரைத்த தென்னுடல்;
தள்ளருங் காலம்; பிள்ளையும் வேறிலை.
என்னுரை காத்துநீ யிம்மண முடிக்க
மன்னவ! கிருபையேல் வாழ்து மிவ்வயின்.
இல்லையேல் முதியவென் னில்லா ளுடனினிச்
செல்ல விடையளி. செல்லுதுங் காசி.

**(கண்ணீர் துளிக்க)**

**ஜீவ :**

ஏனிது சகடரே! என்கா ரியமிது! 45
தேன்மொழி வாணி செவ்விய குணத்தாள்.
காணி லுரைப்பாம். விணில் வழுகை.
அறிவிர்கொல் லவளுளம்?

**சகட:** சிறிதியா னறிவன்

திருநட ராஜனென் றொருவனிங் குள்ளான்; 50
பொருவரும் புருடன்மற் றவனே யென்றவள்
சொல்வது கேட்டுளர் சிற்சில தோழியர்.

**குடில:**

(அரசனை நோக்கி) நல்லதப் படியே நடக்கிலென்?
இவர்க்கும் பொல்லா முரண்டேன்?

**சகட :** (குடிலனை நோக்கி) போம்! போம்! உமது 55
குழந்தையே லிங்ஙனங் கூறீர்! முற்றும்,
இழந்திட வோவெனக் கித்தனை பாடு?
பூவையை வளர்த்துப் பூனைக் கீயவோ?
(அரசனை நோக்கி)
காவலா! அவனைப் போலயான் கண்டிலன்
சுத்தமே பித்தன்; சொல்லுக் கடங்கான்;
தனியே யுரைப்பன்; தனியே சிரிப்பன்,

எங்கெனு மொருபூ இலைகனி யகப்படில்
அங்கங் கதனையே நோக்கி நோக்கித்
தங்கா மகிழ்ச்சியிற் றலைதடு மாறுவன் ;
பரற்கலு மவனுக் ககப்படாத் திரவியம் ; 65

ஆயிரந் தடவை யாயினு நோக்குவன் ;
பேயனுக் களிக்கவோ பெற்றனம் பெண்ணை ?

**ஜீவ :**

ஆமாம் ! யாமுங் கண்டுளேஞ் சிலகால்
நின்றால் நின்ற படியே ; அன்றி
இருக்கினு மிருப்பன் எண்ணிலாக் காலம் !
சிரிக்கினும் விழிக்கினும் நலமிலை தீயதே.
அவனன் றேமுன் அந்தைக் களத்தில்....

**குடில :**

அவன்றான் ! அவன்றான் ! அழகன் ! ஆனந்தன்.

**ஜீவ :**

அழகிருந் தென்பயன் ? தொழிலெலா மழிவே ;
எங்கவ னிப்போது !

**குடில :** இங்குள னென்றனர்,

சிதம்பரத் தனுப்பினேன் ; சென்றிலன் நின்றான் ;
இதந்தரு நின்கட் டளையெப் படியோ ? 75

**ஜீவ ;**

மெத்தவும் நன்மை ; அப்படியே செய்.

**குடில :**

சித்தம் ; ஆயினுஞ் செல்கிலன் ; முனிவர்
பிரியனு தலினுற் பெயர்ந்திலன் போலும்.

**ஜீவ :**

சரியல ; இராச்சிய தந்திரத் தவர்க்கென்!
(சகடரை நோக்கி)
நல்லது சகடரே! சொல்லிய படியே
மொழிவேம் வாணிபால் ; மொய்குழற் சிறுமி

அழகினில் மயங்கினள்; அதற்கென்? நும்மனப்
படியிது நடத்துவம் விடுமினித் துயரம்.

**சகட :**

இவ்வுரை யொன்றுமே யென்னுயிர்க் குறுதி ;
திவ்விய திருவடி வாழுக சிறந்தே! 85

(சகடர் போதல்)

### குறிப்புரை

*விளம்புதிர் -சொல்லுங்கள். அறத்தாறு - அறநெறி. புரவல-அரச. அரந்தை - துன்பம். கொற்றவ - மன்ன. சிலம்-நல்லொழுக்கம். கோலம் - அழகு. இடையூறு - துன்பம். - இடியேறு - பேரிடி. தொழும்பு - அடிமை - இன்னல் - துன்பம். ஓராள் - ஆராய்ந் தறியாள். பொருவரும் - ஒப்பில்லாத.*

**விடைதருக :—**

1. *சகடர் யார்?*
2. *வாணி யார்?* 3. *வாணி யாரை மணக்க விரும்பினாள்?*
4. *வாணி யாரை மணக்க விரும்பவில்லை?* 5. *சகடரது ஆசை யாது?*
6. *விரிதலைப் பேய்—இது யாரைக் குறிக்கின்றது?*
7. *சகடருக்கு முதுமை தோன்றியதைக் குறிக்கும் தொடர்களைக் கூறுக.*
8. *சகடர் பாண்டியனிடம் முறையிட்டது யாது?*
9. *பாண்டியன் கூறிய ஆறுதல் மொழி யாது?*
10. *'இவ்வுரை யொன்றுமே யென்னுயிர்க் குறுதி' — உரை யாது?*

## 3. வில்லிபாரதம்

### கன்னபருவம்

### கண்ணன் கன்னனிடம் வருதல்

அத்தவெற் பிரண்டு விற்கிடை யெனப்போ
யாதவன் சாய்தல்கண் டருளி
முத்தருக் கெல்லா மூலமாய் வேத
முதற்கொழுந் தாகிய முதல்வன்

சித்திரச் சிலைக்கை விசயனைச் "செருந்
  பொழி"லெனத் தேர்மிசை நிறுத்தி
மெய்த்தவப் படிவ வேதிய னாகி
  வெயிலவன் புதல்வனை யடைந்தான். 1

## இயைந்ததொன்று அளிக்க வேண்டுதல்

"தாண்டிய துரங்கக் கருங்கட லுடுத்த
  தரணியிற் றளர்ந்தவர் தமக்கு
வேண்டிய தருதி நீயெனக் கேட்டேன்
  மேருவி லிடைத்தவம் பூண்டேன்
ஈண்டிய வறுமைப் பெருந்துய ருழந்தேன்
  இயைந்ததொன் றிக்கணத் தளிப்பாய்
தூண்டிய கவனத் துரகதத் தடந்தேர்ச்
  சுடர்தரத் தோன்றிய தோன்றல்!" 2

## கன்னன்பாற் கண்ணன் விரும்பிய பொருள்

என்றுகொண் டந்த அந்தணன் உரைப்ப
  இருசெவிக் கமுதெனக் கேட்டு
வென்றிகொள் விசயன் விசயவெங் கணையால்
  மெய்தளர்ந் திரதமேல் விழுவோன்
நன்றென நகைத்துத் "தரத்தகு பொருணீ
  நவில்"கென நான்மறை யவனும்
"ஒன்றிய படிநின் புண்ணியம் அனைத்தும்
  உதவு"கென் றலுமுள மகிழ்ந்தான். 3

## கன்னன் கூறுதல்

"ஆவியோ நிலையிற் கலங்கிய தியாக்கை
  யகத்ததோ புறத்ததோ வறியேன்
பாவியேன் வேண்டும் பொருளெலாம் நயக்கும்
  பக்குவந் தன்னில்வந் திலையால்
ஓவிலா தியான்செய் புண்ணிய மனைத்தும்
  உதவினேன் கொள்கநீ யுனக்குப்
பூவில்வாழ் அயனும் நிகரலன் என்றாற்
  புண்ணியம் இதனினும் பெரிதோ!" 4

## கன்னன் தன்னிதய இரத்தங்கொண்டு தானம் அளித்தல்

என்னமுன் மொழிந்து கரங்குவித் திறைஞ்ச
விறைஞ்சலர்க் கெழிலியே றனையான்
கன்னனை யுவகைக் கருத்தினுல் நோக்கிக்
"கைப்புன லுடன்றரு" கென்ன
அன்னவன் இதயத் தம்பின்வாய் அம்பால்
அளித்தலும் அங்கையால் ஏற்ருன்
முன்னமோ ரவுணன் செங்கைநீர் ஏற்று
மூவுல கமுமுடன் கவர்ந்தோன்.

## வரங்கேட்குமாறு கண்ணன் கன்னனுக்குக் கூறுதலும் கன்னன் கேட்டலும்

மல்லலந் தொடையல் நிருபனை முனிவன்
மகிழ்ந்து "நீ வேண்டிய வரங்கள்
சொல்லுக வுனக்குத் தருதும்" என் றுரைப்பச்
சூரன்மா மதலையுஞ் சொல்வான்
"அல்லல்வெவ் வினையால் இன்னமுற் பவமுண்
டாயினு மேழெழு பிறப்பும்
இல்லையென் றிரப்போர்க் கில்லையென் றுரையா
இதயம்நீ யளித்தருள்" என்ருன்.

## கண்ணன் வரம் அளித்தல்

மைத்துனன் உரைத்த வாய்மைகேட் டையன்
மனமல ருகந்துகந் தவனைக்
கைத்தல மலரான் மார்புறத் தழுவிக்
கண்மலர்க் கருணைநீ ராட்டி
"எத்தனைப் பிறவி யெடுக்கினும் அவற்றுள்
ஈகையுஞ் செல்வமு மெய்தி
முத்தியும் பெறுதி முடிவில்" என் றுரைத்தான்
மூவரும் ஒருவ னும் மூர்த்தி.

## கண்ணன் அளித்த தரிசனம்

போற்றிய கன்னன் கண்டுகண் களிப்பப்
புணரிமொண் டெழுந்தகார் முகிலை

மாற்றிய வடிவும் பஞ்சவா யுதமும்
வயங்குகைத் தலங்களு மாகிக்
கூற்றுறழ் கராவின் வாயினின் றழைத்த
குஞ்சர ராசன்முன் அன்று
தோற்றிய படியே தோற்றினன் முடிவுந்
தோற்றமு மிலாதனைந் துளவோன்.

## கண்ணன் அடைந்த மகிழ்ச்சி

அமரரா னவரும் அமரயோ னிகளும்
அமரருக் கதிப னவனும்
கமலநான் முகனும் முனிவருங் கண்டு
கனகநாண் மலர்கொடு பணிந்தார்
சமரமா முனையிற் றனஞ்சயன் கணையாற்
சாய்ந்துயிர் விடவுஞ் செங்கண்
அமலநா ரணனைக் காணவும் பெற்றேன்''
என்றுதன் னகமிக மகிழ்ந்தான்.

## வேறு

## கன்னன் கூறுதல்

'தருமன்மகன் முதலான அரிய காதற்
றம்பியரோ டமர்மலைந்து தறுக ணண்மைச்
செருவிலெனை துயிரனைய தோழற் காகச்
செஞ்சோற்றுக் கடன்கழித்தேன் தேவர் கோவுக்(கு)
உரைபெறுநற் கவசகுண் டலமும் ஈந்தேன்
உற்றபெறு நல்வினைப்பே றுனக்கே தந்தேன்
மருதிடைமுன் தவழ்ந்தருளுஞ் செங்கண் மாலே,
மாதவத்தால் ஒருதமியன் வாழ்ந்த வாறே.'' 10

## குறிப்புரை

*வில்லிபுத்தூரார் திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில் அந்த ணர் குலத்திற் பிறந்தார். இவர் வடமொழி தென்மொழிகளை நன்கு*

கற்றவர்; சந்த இன்பந் தோன்றக் கவி பாடுவதில் வல்லவர். வக்க பாகை என்னும் நகர்க்கு அரசனை வரபதியாட்கொண்டான் வேண்டுகோளுக்கு இணங்கி இவர் இந்நூலை இயற்றி இதனை அவனது அவைக்களத்தில் அரங்கேற்றினர். கம்பரைப்போல இவரும் தம்மை ஆதரித்த வள்ளலைத் தாம் பாடிய நூலில் புகழ்ந்துள்ளார்.

பாரதம்—பரதனது வம்சத்தில் பிறந்தோரது வரலாற்றைக் கூறும் நூல். இது வடமொழித் தத்திதாந்தநாமம். இப்பாடப் பகுதி பதினேழாம் போர்ச் சருக்கத்தில் உள்ளது.

கன்னன் என்றும் இல்லையென்னமல் ஈயும் வண்மை உடைய நல்லோனதலால், அப்புண்ணியம் அவனைப் போர்க்களத்திற் பாதுகாத்து வருகின்றது. எதிர்ப்பக்கத்தில் கண்ணன் இவ்வுண்மை தெரிந்து, புண்ணியத்தை அவனிடமிருந்து தான்பெற்று அவனைப் போரில் வீழ்த்தக் கருதி அவன்பால் வந்து அதனை இரக்கும் பகுதி இங்கே கூறப்படும்.

## அருஞ் சொற்கள்

1. அத்தவெற்பு - சூரியன் மறையும் மேற்கு மலை; அஸ்தகிரி. வில்கிடை - வில் கிடக்கு மளவு தூரம். ஆதவன் - சூரியன். முத்தர் - முத்தி யுலகத்தை அடைந்தவர். முதல்வன் - கடவுள்; கண்ணன். சித்திரம் - அழகிய. சிலை - வில். விசயன் - அருச்சுனன். செரு - போர். தவப்படிவம் - தவக்கோலம். வெயிலவன் புதல்வன் - சூரியன் மகனான கர்ணன்.

2. தாண்டிய - மோதுகிற. தரங்கம் - அலை. வேண்டிய - வேண்டியவற்றை. தருதி - கொடுக்கின்றனை. ஈண்டிய - மிக்க. உழந்தேன் - அனுபவித்தேன். இயைந்தது ஒன்று - (உன்னால்) கொடுக்கக் கூடியதொரு பொருளை. இக்கணத்து - இப்பொழுதே, கவனம் - நடை. துரகதம் - குதிரைகள். சுடர் - சூரியன். தோன்றல் - கன்னனே! தோன்றல்: தோன்றல் என்பதன் விளி.

3. வென்றி - வெற்றி. விசயன் - அருச்சுனன். விசய வெம்கணை - வெற்றிபொருந்திய கொடிய அம்புகளால். விழுவோன் விழும் நிலையிலுள்ள கர்ணன். நவில்க - சொல்லுக. ஒன்றிய (இதுவரையில்) சேர்ந்திருக்கும்.

4. வேண்டும் பொருள் எல்லாம் - (வேண்டுவார்) வேண்டும் பொருள்களை யெல்லாம். நயக்கும் - விரும்பிக்கொடுக்கும். பக்கு

வம் - சமயம். ஆல் - அசை. ஓவு இலாது - ஒழிதல் இல்லாமல்; பூவில்வாழ் அயனும் - தாமரையில் வாழும் பிரமனும், அயன் அந்தணனாகலின், இவ்வந்தணனுக்கு அவனும் நிகரலன் என்றார். இதனினும் - உனக்குக் கொடுக்கும் இச்செயலினும். பெரிதோ: ஓகாரம் எதிர்மறை. ஆவியோ : ஓகாரம் உயர்வுசிறப்பு.

5. கரம் - கைகளை. இறைஞ்ச - வணங்க. இறைஞ்சலர்க்கு- தன்னை வணங்காத பகைவர்களுக்கு. எழிலி ஏறு அனையான் - மேகத்தில் தோன்றும் இடியை ஒப்பவனான கன்னன். கைப்புனல்- கையினால் தாரை வார்க்கும் நீர். அன்னவன் - கர்ணன். இதயத்து அம்பின்வாய் - (தன்) நெஞ்சில் தைத்த அம்பின வழியே வெளி வரும். அம்பால் - நீரினால; செந்நீரினால்; இரத்தத்தால். முன் - முன்பு (வாமனாவதாரத்தில்). அவுணன் - மாவலிச் சக்கரவர்த்தி.

6. மல்லல் அம் தொடையல் - வளப்பத்தையுடைய அழகிய மாலையைச் (சூடிய). நிருபன் - அரசன் ; கர்ணன். முனிவன் - அந்தணன். சூரன் மாமதலை-சூரியனது சிறந்த மகனான கர்ணன். அல்லல் - பிறவித் துன்பங்களுக்குக் காரணமான. உற்பவம் - பிறப்பு.

7. மைத்துனன் - கர்ணன். குந்திதேவி கண்ணனுக்கு அத்தையாதலின் அவள் மகனான கர்ணன் அவனுக்கு மைத்துனனாவான். உகந்துஉகந்து- மிகமகிழ்ந்து. கைத்தலமலரால்-மலர்போன்ற கையால். மூவர்-அயன், அரி, அரன்.

8. புணரி - கடல்நீரை. கார்முகில்-கரியமேகத்தை. மாற்றிய - (கருநிறத்தில் தனக்கு ஒப்பாகாதென்று) நீக்கிய. பஞ்சாயுதம் - ஐந்து படைகள்; சங்கு, சக்கரம், கதை, வாள், வில், வயங்கு - விளங்கும். கூற்று உறழ் கராவின் - எமனை ஒத்த முதலையின். குஞ்சரராசன் - கஜேந்திரன், பைந்துளவோன் - பசுமையான துளசி மாலை அணிந்த கண்ணன்,

9. அமரயோனிகளும் - ஏனைத் தேவசாதிகளும், அமரருக்கு அதிபனாவான் - இந்திரன். கனகம் - பொன்மயமான. நாள்மலர் - அன்று பூத்த மலர், மா சமர முனையில் - பெரிய போர்க்களத்தில். தனஞ்சயன் - அருச்சுனன். அமலன் - குற்றமற்றவன்.

10. தருமன் மகன் - தருமபுத்திரன். அமர்மலைந்து - போர் செய்து, தறுகண் ஆண்மை செருவில் - அஞ்சாமையோடு கூடிய வீரப்போரில். தோழன் - துரியோதனன். தேவர் கோ - தேவேந்திரன்- உரைபெறு - புகழ்பெற்ற, முன் - முன்பு (கிருஷ்ணாவதாரத்தில்), மருது இடை - இரட்டை மருத மரங்களினிடையிலே. வாழ்ந்த

ஆறு ஏ - பெருவாழ்வை அடைந்த விதம் என்னே! என்று வியந்து கூறியபடி.

### பயிற்சி

I. விடை எழுதுக :—

1. வில்லிபுத்தூரார் பாரதம் பாடக் காரணம் என்ன ?
2. போர் எப்பொழுது நிறுத்தப்பட்டது ?
3. வெயிலவன் புதல்வன் யார் ?
4. அவனை அடைந்தது யார்? என்ன வேடம் கொண்டார்?
5. கண்ணன் கன்னனிடம் யாது கூறினன் ? யாது கேட்டனன் ?
6. கண்ணன் விரும்பிய பொருள் யாது ?
7. புண்ணியத்தை விரும்பிய கண்ணனிடம் கன்னன் யாது கூறினன் ?
8. கன்னன் புண்ணியத்தை எவ்வாறு அளித்தான் ? அதனைக் கண்ணன் எவ்வாறு ஏற்றான் ?
9. கன்னன் கண்ணனிடம் கேட்ட வரம் யாது ?
10. கண்ணன் அளித்த காட்சியைக் கவி எவ்வாறு வருணித்தார் ?
11. "மாதவத்தால் ஒரு தமியன் வாழ்ந்தவாறே" —— இது யார் கூற்று ? இங்ஙனம் கூறக் காரணம் யாது ?

II. கீழேயுள்ள அடிகளில் குறிப்பிட்டுள்ள கதைகளைச் சுருக்கி வரைக.

1. "முன்னமோ ரவுணன் செங்கைநீர் ஏற்று
மூவுல கமுமுடன் கவர்ந்தோன்"
2. "கராவின் வாயினின் றழைத்த
குஞ்சர ராசன் முன்............ துளவோன்"
3. "மருதிடை முன் தவழ்ந்தருளுஞ் செங்கண்மால்"

III. "கன்னன் கடை நாள்" என்ற பொருள் பற்றி ஒரு கட்டுரை வரைக.

# IV சிறு நூல்கள்

## தமிழன் இதயம்

### இளந் தமிழனுக்கு

1 தமிழனென்ற பெருமையோடு
தலைநிமிர்ந்து நில்லடா
தரணியெங்கும் இணையிலாஉன்
சரிதைகொண்டு சொல்லடா
அமிழ்தமென்ற தமிழினோசை
அண்டமுட்ட உலகெலாம்
அகிலதேச மக்களுங்கண்
டாசைகொள்ளச் செய்துமேல்
கமழ்மணத்தின் தமிழில்மற்ற
நாட்டிலுள்ள கலையெலாம்
கட்டிவந்து தமிழர்வீட்டில்
கதவிடித்துக் கொட்டியே
நமதுசொந்தம் இந்தநாடு
நானிலத்தில் மீளவும்
நல்லவாழ்வு கொள்ளச்சேவை
செய்துவாழ்க நீண்டநாள்.

—ஆஸ்தான கவிஞர். நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை.

## அழகின் சிரிப்பு

### கிளி

2 தென்னை தான் ஊஞ்சல்! விண்தான்
திருவுலா வீதி! வாரித்
தின்னத்தான் பழம், கொட்டைகள்!
திருநாடு வையம் போலும்!
புன்னைக்காய்த் தலையில் செம்மை!
புதுமுடி புனைந்திருப்பாய்!
உன்னைத்தான் காணு கின்றேன்
கிள்ளாய் நீ ஆட்சி உள்ளாய்!

3 கொஞ்சுவாய் அழகு தன்னைக்
கொழிப்பாய் நீ, அரசர் விட்டு
வஞ்சியர் தமையும், மற்ற
வறியவர் தமையும், ஒக்க
நெஞ்சினில் மகிழ்ச்சி வெள்ளம்
நிரப்புவாய். அவர் அளிக்கும்
நைஞ்சநற் பழத்தை உண்பாய்
கூடுழேனும் நன்றே என்பாய்!

—பாரதிதாசன்

## நாரை விடுதூது

4 நாராய்! நாராய்! செங்கால் நாராய்!
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்!
நீயுநின் மனைவியுந் தென்றிசைக் குமரியாடி
வடதிசைக் கேகுவி ராயின் எம்மூர்ச்
சத்திமுற்ற வாவியுள் தங்கி
நனைசுவர்க் கூரைக் கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டு
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடையின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையு ளிருக்கும் பாம்பென உயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டன மெனுமே.

—சத்தி முற்றப் புலவர்

## மீனாட்சியம்மை குறம்.

5 கொழுங் கொடியின் விழுந்த வள்ளிக்
கிழங்குகல்லி எடுப்போம்
குறிஞ்சிமலர் தெரிந்து முல்லைக்
கொடியில்வைத்துத் தொடுப்போம்
பழம்பிழிந்த கொழுஞ்சாறும்

தேறலும் வாய் மடுப்போம்
பசுந்தழையும் மரவுரியும்
இசைந்திடவே உடுப்போம்
செழுந்தினையும் நறுந்தேனும்
விருந்தருந்தக் கொடுப்போம்
சினவேங்கைப் புலித்தோலின்
பாயலிற்கண் படுப்போம்
எழுந்துகயற் கணிகாலில்
விழுந்துவினை கெடுப்போம்
எங்கள் குறக் குடிக்கடுத்த
இயல்பிதுகா ணம்மே.

—குமர குருபரர்

### குறிப்புரை

*1. இது 'தமிழன் இதயத்தில்' உள்ள பகுதி. கவிஞர் இராம லிங்கம் பிள்ளையவர்கள் நாட்டிற்கும் மொழிக்கும் பல தொண்டு களைச் செய்துள்ளார். இவரது நூல்கள் தமிழன் இதயம், சங்கொலி, அவனும் அவளும் முதலியவை.*

*2. பாரதி தாசன் இக் காலத் தமிழ் மறு மலர்ச்சியில் தனி யிடம் பெற்றவர். இப் பாடல்கள் அழகின் சிரிப்பிலிருந்து எடுக்கப் பட்டவை. இவர் அழகின் சிரிப்பு, எதிர்பாரா முத்தம், இருண்ட வீடு, குடும்ப விளக்கு, பாண்டியன் பரிசு முதலிய பல கவிதை களை இயற்றியுள்ளார்.*

### அருஞ் சொற்கள்

*3. வஞ்சியர் - வஞ்சிக் கொடி போன்ற பெண்கள். வறியர் - ஏழைகள்.*

*4. வாவி - குளம். பேழை - பெட்டி.*

*5. கல்லி - தோண்டி. தேறல் - தேன். மரவுரி - மரத்தின் பட்டையாலாகிய ஆடை. சினம் - கோபம். கயல் - மீன்.*

### பயிற்சி

*1. நாமக்கல் கவிஞர் தமிழனுக்குக் கூறுவனவற்றைத் தொகுத்துக் கூறுக.*

*2. கிளிக்கு ஊஞ்சல் எது? வீதி எது?*

3. *கிளி யாருக்கு மகிழ்ச்சியளிக்கும்?*
4. *புலவர் எங்கு இருந்தார்? எந்நிலையில் இருந்தார்?*
5. *அவர் எத்தகைய நாரையைக் கண்டார்?*
6. *அது எங்கிருந்து எங்குச் சென்றது?*
7. *புலவர் நாரையை எங்குத் தங்கச் சொன்னார்?*
8. *புலவர் நாரையிடம் யாரைக் காணுமாறு கூறினர்?*
9. *புலவர் நாரையிடம் தன் மனைவி யாது செய்து கொண் டிருப்பாள் எனக் கூறினர்?*
10. *பேழையுள் இருக்கும் பாம்பு—இது எதனை விளக்க வந் தது?*
11. *குறவர் செயல்கள் எவை?*

## V. தனிப் பாடல்கள்

ஆவின; மழை பொழிய; இல்லம் விழ;
அகத்தடியாள் மெய்ந்நோவ; அடிமை சாவ;
மாவிரம் போகுதென்று விதைகொண் டோட;
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்;
சாவோலை கொண்டொருவர் எதிரே செல்லத்;
தள்ளொணா விருந்துவரச்; சர்ப்பந்தீண்டக்
கோவேந்தர் உழுதுண்ட கடமை கேட்கக்;
குருக்களோ தக்கணைகள் கொடுவென் றாரே. 1

'இரவலனே! உனக்கில்லாத
தென்ன? இதயமென்ன?
பரவுண வேது? சுவையற்ற
தென்ன? சொற் பான்மை யென்ன?
தரவுரை செய்திட' வென்றான்.
அதற் கொன்றுஞ் சாற்றிலன் யான்
'வரதிரு வேங்கட நாதா' வென்
றேன் பொன் வழங்கினனே. 2

### குறிப்புரை

1. *இச் செய்யுளைப் பாடியவர் இராமச்சந்திர கவிராயர். சர்ப்பம் - பாம்பு. கடமை - வரி.*
2. *இல்லாததென்ன? — திரு; இதயம் என்ன — வேம். உணவு ஏது? —கடன்; சுவையற்றது என்ன? நா; சொற்பான்மை என்ன? —தா.*

*திரு + வேம் + கடன் + நா + தா—திருவேங்கட நாதா.*

### பயிற்சி

I. விடை எழுதுக :—

1. ஆசிரியர் குறிப்பிட்ட துன்பங்கள் எவை?
2. திருவேங்கட நாதன் இரவலனைக் கேட்ட வினாக்கள் எவை? அவற்றிற்குரிய விடைகள் அவன் பெயரிலேயே எங்ஙனம் அமைந்துள்ளன? விளக்குக.
3. இத்தகைய செய்யுளுக்கு என்ன பெயர் கொடுக்கலாம்? (வினாவுத்தரம்).

## VI. வருணனை

### சூரியாஸ்தமன வருணனை

மானி னோக்கியர் மைந்தரொ டாடிய
வான நீர்விளை யாடலை நோக்கினான்
றானு மன்னது காதலித் தானென
மீன வேலையை வெய்யவ னெய்தினான் 2

### சந்திரோதய வருணனை

ஆற்ற லின்மையி னுலழிந் தேயுந்தம்
வேற்று மன்னர்த மேல்வரும் வேந்தர்போ
லேற்று மாதர் முகங்களொ டெங்கணுந்
தோற்ற சந்திரன் மீளவுந் தோற்றினான் 2

—கம்பர்.

### குறிப்புரை

### அருஞ் சொற்கள்.

1. மானின் நோக்கியர் - மான் போன்ற பார்வையையுடைய மகளிர். மைந்தர் - ஆடவர். வெய்யவன் - கதிரவன். வேலை - சமுத்திரம்.
2. ஆற்றல் - வலிமை, வேற்று மன்னர் - பகை வேந்தர்.

### பயிற்சி

I. 1. மானின் நோக்கியர் யார்?
2. அவர்கள் யாருடன் நீர் விளையாடலை மேற்கொண்டனர்?
3. வெய்யவன் நீர் விளையாடலைக் கருதி யாது செய்தான்?
4. வேலை — இரு பொருள் கூறு.
5. வெய்யவன் யார்? அவனைக் குறிக்கும் வேறிரு பெயர்களைக் கூறு.

II. 1. சந்திரன் முன்னாள் மறைந்ததற்குக் காரணம் யாது?
2. மீண்டும் உதித்ததற்குக் காரணம் யாது?
3. சந்திரன் முன்னாளில் மறைந்து பின் உதித்ததற்கு ஆசிரியர் கூறும் உவமை யாது?

# உரை நடை

## 1. சங்க இலக்கியங்கள்

**திரு. எஸ், வையாபுரிப் பிள்ளை, B.A., B.L.,**

இப்போது கிடைக்கும் பழைய தமிழ்ச் செய்யுட்களிற் சில கிறிஸ்து அப்தத்தின் தொடக்கத்தில் இயற்றப்பட்டவை. ஆதலால், தமிழிலக்கிய சரிதம் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னமேயே தொடங்கியுள்ளது. இப்பெருமை எல்லா மொழிகளுக்கும் உரிய தன்று. மலையாள மொழியில் கி. பி. பதினாலாம் நூற்றாண்டிலும், தெலுங்கு மொழியில் கி. பி. பதினோராம் நூற்றாண்டிலும், கன்னட மொழியில் 'கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிலும் ஆதி இலக்கியங்கள் தோன்றின. இப்பொழுது பல தேசங்களிற் பயிலப்பட்டுப் பெருஞ் சிறப்புடன் விளங்கும் ஆங்கில மொழியிற் கூட இலக்கியம் முதன் முதலில் தோன்றியது கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் தான். **ஆரியம், சீனம், லத்தீன், கிரேக்கு, எபிரேயம்** முதலிய ஒரு சில மொழிகளிலுள்ள ஆதி இலக்கியங்களே தமிழ் இலக்கியங்களின் அளவு பழமை வாய்ந்தவை.

மிகப் பழமையான காலந் தொட்டே தமிழ் சிறப்புற்று வாழ்ந்து வந்த இடம் பாண்டிய நாடு என்று கூறுவர். வில்லிபுத்தூரார் என்ற கவிஞர்,

"பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்து
இருப்பிலே இருந்து வைகையேட்டிலே தவழ்ந்த பேதை"

என்று தமிழைக் குறித்துக் கூறுகின்றார். இப் பாண்டிய நாட்டிலே தலைநகராகிய மதுரையிலே ஒரு தமிழ்ச் சங்கம் இருந்ததென்பது கர்ண பரம்பரைச் செய்தி. கிறிஸ்து அப்தத்தின் இரண்டாம் நூற்றாண்டு இச்சங்கம் இருந்த காலம் என்பர் ஆராய்ச்சியாளர். தமிழ்ச் செய்யுட்களையும் புலவர்களையும் ஆராய்ந்து சீர்தூக்கி மதிப்பிடுதல் இச்சங்கம் செய்து வந்த பணியென்று கூறப்படுகின்றது. நாற்பத்தொன்பது புலவர்கள் இச் சங்கத்தில் இருந்தார்கள் என்பர். சங்கத்தைப் பற்றிய

வரலாறு **இறையனார் களவியலுரை** என்ற நூலிலே விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இது கடைச் சங்கம் என்றும், இதற்கு முன் இரண்டு சங்கங்கள் இருந்தன என்றும் களவியலுரை கூறும். தலைச் சங்கம் 4440 ஆண்டுகளும், இடைச்சங்கம் 3700 ஆண்டுகளும், கடைச் சங்கம் 1850 ஆண்டுகளும் இருந்தனவாம்.

கடைச்சங்க காலத்து நூல்களே நமக்கு இப்போது கிடைப்பவை. இந்நூல்களையே நாம் **'சங்க இலக்கியங்கள்'** என வழங்குகிறோம். 'தொல்காப்பியம்' என்ற பேரிலக்கண நூல் இடைச்சங்க காலத்து இறுதியில், அதாவது சுமார் கி. மு. 5000-ல் தோன்றியதென்றும், தலை, இடைச்சங்கங்களிற் பிறந்த ஏனைய நூல்கள் கடல்கோட்பட்டு அழிந்துவிட்டன என்றும் பரம்பரை வரலாறு கூறுகின்றது.

சங்க இலக்கியங்களை இரு பெருங் கூறுகப் பகுக்கலாம்: பத்துப் பாட்டு எட்டுத் தொகையென. பத்துப் பாட்டுக்களாவன: முருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன. இவற்றை,

> "முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
> பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
> கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்
> பாலை கடாத்தொடும் பத்து"

என்ற செய்யுளால் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளலாம். மலைபடுகடாம் என்ற நூலுக்குக் கூத்தராற்றுப் படை என்ற பெயரும் உண்டு.

முருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறு பாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படை, மலைபடுகடாம் என்ற ஐந்து பாட்டுக்களும் ஆற்றுப்படை என்ற நூல் வகையைச் சார்ந்தவை. கொடையாளி ஒருவனிடம் பெருஞ் செல்வத்தைப் பரிசாகப் பெற்றுத் திரும்பும் கூத்தர் முதலியோர் வழியிலே எதிர்ப்பட்ட இரவலரைக் கண்டு, அக்கொடையாளியின் பெருமையைக் கூறி, அவனிடம் சென்று தாம் பெற்றதுபோல் பெருஞ்செல்வம் பெறுமாறு வழிப்படுத்துதலே இந்நூல் வகையின் கருத்து. ஆறு-வழி; படை-படுத்துதல். ஏனைய ஐந்து பாட்டுக்களில் மதுரைக் காஞ்சி, நிலையாமையை ஓர் அரசனுக்கு அறிவுறுத்தி, இவ்வுலகில் வாழும் நாட்களை உயர்ந்த லட்சியங்களை மேற்

கொண்டு இனிதாகக் கழித்தல் வேண்டுமென வற்புறுத்துகிறது. குறிஞ்சிப் பாட்டு ஓர் ஆரிய அரசனுக்குத் தமிழ்ச் சுவையை அறிவுறுத்தும் பொருட்டு இயற்றப்பட்டதென்று சரித்திரம் வழங்குகிறது. இப் பாட்டுகளுட் சில அகப்பொருளையும் சில புறப்பொருளையும் பற்றியவை. **அகம்** என்பது காதல் பற்றிக் கூறும் பகுதி. **புறம்** என்பது அறமும் பொருளும் பற்றிப் புறத்தே நிகழும் ஒழுக்கத்தைக் கூறும் பகுதி.

பாண்டியருள் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனும், சோழருள் கரிகாற் பெருவளத்தானும், தொண்டைமான் இளந்திரையனும் பத்துப் பாட்டிற் புகழப்பட்டிருக்கின்றனர்.

எட்டுத் தொகையாவன : நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன. இவற்றை,

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ(று)
ஒத்த பதிற்றுப்பத்(து) ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்தும் கலியோ(டு) அகம்புறமென்(று)
இத்திறத்த எட்டுத் தொகை"

என்ற செய்யுளால் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளலாம். இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்னும் ஐந்து நூல்களும் அகப்பொருள் பற்றியவை ; ஏனைய மூன்றும் புறப்பொருள் பற்றியவை. ஐங்குறுநூற்றில் ஐந்நூறு செய்யுட்களும், பதிற்றுப்பத்தில் நூறு செய்யுட்களும், பரிபாடலில் எழுபது செய்யுட்களும், கலித்தொகையில் நூற்றைம்பது செய்யுட்களும் உள்ளன. ஏனைய நூல்கள் ஒவ்வொன்றிலும் நானூறு செய்யுட்கள் உள்ளன. கலித்தொகை கலிப்பாவாலும், பரிபாடல் பரிபாட்டாலும் இயன்றன. மற்றை ஆறு தொகை நூல்களும் ஆசிரியப்பாவால் இயன்றன. அகம்பற்றியவற்றுள்—ஐங்குறுநூறு—திணை ஒவ்வொன்றுக்கும் நூறு விதம்—குறிஞ்சி, பாலை, மருதம் முல்லை, நெய்தல் என்ற ஐந்து திணைகளுக்குமாக ஐந்நூறு செய்யுட்கள் கொண்டது. புறம் பற்றிய நூல்களுள், ஒவ்வொரு சேரனுக்கும் பத்துச்செய்யுள் விதம், பத்துச் சேர அரசர்களுக்குரிய நூறு செய்யுட்கள் கொண்டது. பதிற்றுப்பத்து. எட்டுத் தொகை நூல்களுள் பரிபாடலுக்கு ஒரு தனிப்பட்ட சிறப்பு உண்டு. அதிலுள்ள பாட்டுக்கள் பண்முறையால் தொகுக்கப்பெற்று

உரிய பண்களுடன் பாடப்பெற்று வந்தவை. கலித்தொகையிலுள்ள தமிழிசைகள் இசையோடு பாடுதற்கு ஒத்தனவாயுள்ளன.

தொகைநூல் ஒவ்வொன்றிலுமுள்ள செய்யுட்கள் பல புலவர்களால் பாடப் பெற்றவை. அப்புலவர்கள் ஓரிடத்தவரல்லர்; ஓரினத்தவரல்லர்; ஒரு காலத்தவருமல்லர்; ஒரு சமயத்தைச் சார்ந்தவருமல்லர். அவர்களைக் கணக்கிட்டு 'நானூற்று நாற்பத்தொன்பதின்மர்' என்று களவியலுரை கூறும்.

சில புலவர்களுடைய பெயர்கள் காணப்படவில்லை. ஒருவருக்குக் 'கல்பொரு சிறு நுரையார்' என்று பெயர். அவர் இயற்றிய செய்யுளில்,

> "கல்பொரு சிறுநுரை போல
> மெல்ல மெல்ல இல்லா குதுமே"

என்று வந்துள்ளது. இங்கே காணப்படும் உவமானத்தினின்றும் அவருக்குப் பெயர் எழுந்துள்ளமை வெளிப்படை. ஆசிரியர் காலத்தே அவருக்கு வழங்கிய இப் புனைபெயர் பிற்காலத்தும் வழங்கி, அதுவே பெயராக முடிந்திருக்கலாம்; அல்லது அவர் பெயர் மறைந்துபோன பிற்பாடு, செய்யுளின் தொடரினின்றும் ஒரு பெயர் பிற்காலத்தாரால் கொடுக்கப்பட்டும் இருக்கலாம். சில பெயர் முற்கூறியபடியும், சில பெயர் பிற்கூறியபடியும் தோன்றியிருத்தலும் கூடும். உண்மை இதுவென்று இப்போது தெரியக்கூடவில்லை. இங்ஙனம் புனைபெயருள்ளவர்கள் சுமார் இருபத்தைந்து ஆசிரியர்கள். இவர்களை நீக்கிப்போலும் களவியல் உரைகாரர் கணக்கிட்டது.

பெயர் தெரிந்த புலவர்களுள் சுமார் இருபத்தேழு பெண்பாற் புலவர்கள் காணப்படுகின்றார்கள். அதாவது நூற்றுக்கு ஆறு விழுக்காடு கணக்காகின்றது. பொது மக்களிடையே கல்வி பரவாத முற்காலத்து இவ்வளவாகப் பெண்பாற் புலவர் இருந்தமை பாராட்டுதற்கு உரியது. இவருள்ளே ஔவையார், வெள்ளி வீதியார், காக்கை பாடினியார், நச்செள்ளையார், பாரிமகளிர் முதலியோர் குறிப்பிட்டுக் கூறத்தக்கவர்கள்.

தமிழிலே தொகைநூல்கள் மிகப்புராதன காலத்துத்தானே தொகுக்கப்பட்டமைபோல, கிரேக்க மொழியிலும் மிகப்பழைய காலத்தில் **'அந்தாலஜி'** என்று கூறப்படும் தொகை நூல் தொகுக்

கப் பட்டுள்ளதென அறிகின்றோம். கிரேக்கத் தொகை நூலின் வரலாற்றைக் குறித்து **ரிச்செர்ட் கார்னெட்** என்ற ஆசிரியர் விளக்க மாக எழுதியிருக்கின்றனர். அந்தாலஜி என்ற சொல்லுக்குப் பூந்துணர் என்று பொருள். சுமார் கி. பி. 90-ல் **மிலீகர்** என்பவரால் இத்தொகை நூல் தொகுக்கப்பெற்றதாம். இத்தொகைநூற் செய்யுட்கள் தெய்வங் களேயும், புகழ்பெற்று விளங்கிய அரசர் முதலிய பெரியோர்களேயும், பெருநிகழ்ச்சிகளேயும் பொருளாகக் கொண்டு அமைந்துள்ளன. சுருங் கச் சொல்லல், பொருளாழமுடைமை, நவின்றோர்க்கினிய நன்மொழி புணர்த்தல், பொருளின் ஒருமை யென்ற குணங்கள் இவற்றிலே நன்கு விளங்கின என்று சொல்லப்படுகிறது. இவ் வியல்புகளோடு பொருந் திய கிரேக்கத் தொகை நூல் புறநானூறு என்னும் தமிழ்த் தொகை நூலோடு பெரிதும் ஒப்பிடற்பாலதாயுள்ளது. மிலீகரது தொகை நூலுக்குப்பின் நான்கு தொகை நூல்கள் ஒன்றன்பின் ஒன்றுகத் தோன்றின. இவைகளெல்லாம் அந்தாலஜி என்ற பெயராலேயே வழங்கின. இறுதியில் தொகுக்கப்பட்டது **ஜஷ்டினியன்** என்னும் அரசன் (கி. பி. 483—565) காலத்திலாகும். இந்தத் தொகைநூலில் காதற் செய்யுட்கள் பல துறைகளாகப் பகுக்கப்பட்டுச் சேர்க்கப் பெற்றுள்ளன என்று அறிகிறோம். இதனேடு தமிழ்த்தொகை நூல் களுள் அகப்பொருள் கூறுவனவாய் அமைந்துள்ள நற்றிணே, குறுந் தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை அகநானூறு என்ற ஐந்தும் ஒப்பிடத்தக்கன.

பழமையிலும், பொருளமைதியிலும், செய்யுள் நயத்திலும் மாத்திர மேயன்றி வேறு சில அம்சங்களிலும் இவ்விரு மொழிகளிலுமுள்ள தொகைநூல்கள் ஒப்பிடற்குரியன. கிரேக்க நாகரிகம் நீடித்திருந்த காலத்தில் அதன் நிலைமை பலபடியாக மாறிவந்திருக்கின்றது. இம்மாறு பாடுகளுக்கு இடையேயும் கிரேக்கத் தொகைநூல் கிரேக்கர்களுக்குப் புத்துயிர் கொடுத்துதவிய அமிர்த சஞ்சீவினியாய் நீடித்து நிலேத்து வந்திருக்கின்றது. இதுவேபோன்றுள்ளன தமிழ்த்தொகை நூல்களும். இரண்டிலும் பழைய நாகரிகங்களும், பழக்க வொழுக்கங்களும் பிரதி பலித்துக் காண்கின்றன. பிற்காலத்தெழுந்த இலக்கியங்களின் நெறியை வரம்புகட்டுதற்கும் இத்தொகை நூல்கள் உதவின. இவ்வா ருகப் பலபடியாலும் இருதேசத்துத் தொகை நூல்களும் ஒன்றோ டொன்று உவமிக்கக்கூடியனவாயுள்ளன.

தொகைநூற் செய்யுட்களிலே சிறந்து விளங்குகிற சில பொது வியல்புகளை இனிக் கவனிப்போம். பின் வருவது புறநானூற்றுச் செய்யுள்:

பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடைச் சேய வாயினும், தொடைபுணர்ந்(து)
அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங்(கு) என்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப;
சாலார் சாலார் பாலரா குபவே,

இது பிசிராந்தையாருக்கும் கோப்பெருஞ் சோழனுக்கும் இருந்த நட்பினைக்கண்டு கண்ணகனார் என்ற புலவர் பாடியது. 'இனம் இனத் தோடு' என்ற பழமொழியின் கருத்து இச்செய்யுளோடு ஒப்பிடத்தக்கது. சான்றோர் வெவ்வேறு இடங்களில் தோன்றி வாழ்ந்தபோதிலும் ஒரு வரோடொருவர் நெருங்கிய கேண்மைகொள்வார் என்பது செய்யுளின் கருத்து. இதற்கு ஓர் உபமானம் தரப்படுகிறது. பொன்னும், பவளமும் முத்தும், இரத்தினமும் ஒன்றனின்றொன்று வெகு தூரத்தில் தோன்றிய போதிலும், விலைமிக்க நல்ல அணிகலமொன்று அமைக்குங்காலத்து அவை ஓரிடம் வந்து கோவை பொருந்திச்சேருகின்றன என்பது உப மானம். இதன் அழகும், நயமும் அறிந்து இன்புறத்தக்கன. 'சாலார் சாலார் பால'ராகுபவே, என்பது சொல்லியொழிக்க வேண்டியதாதலாலே அவ்வடியை இலேசாக உச்சரித்து விட்டுவிடுதல்வேண்டும். உபமா னம் செல்லும் வரையும் எதுகைமோனை நயங்களால் செய்யுளடிகள் சிறந்து விளங்குவதும், அது முற்றியபின், கருத்தின் தனி யாற்றலே துணையாக மோனை முதலிய நயமின்றியும் அழகு படக் கடைசி யிரண் டடிகள் அமைந்திருப்பதும் புலவரின் கவித்வசக்தியை அறிவுறுத்து கின்றன. கருத்துக்கேற்ற சொற்கள், சுவைத்துத் தேர்ந்தெடுத்த சொற்கள், கட்டுரைச் சுவைபட அமைந்த சொற்செறிவு, எளிமையும் ஆற்றலும் படைத்த செய்யுள் நடை, கம்பீரமான ஓசை நயம், பொருள் செல்லும் கதியும், செய்யுளின் கதியும் ஒன்றையொன்று தழுவி நிற்கும் அமைதி—இவையனைத்தும் இச்செய்யுளில் விளங்குகின்றன. இவ் வியல்புகள் சங்கச் செய்யுட்களுட் பெரும்பாலனவற்றிற் காணப்படு கின்றன. இத்தகைய செய்யுட் செல்வம் நம்மவரால் என்றும் போற் றுதற்குரியது.

## பயிற்சி

பொருள் கூறுக :—

அப்தம், பொருப்பு, பேதை.

I. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—

பழமை வாய்ந்தவை, கர்ணபரம்பரை, வழிப்படுத்தல், வற்புறுத்துகிறது.

III. விடை தருக:—

1. தமிழ்மொழியில் ஆதி இலக்கியங்கள் எப்பொழுது தோன்றியவை ?
2. வில்லிபுத்தூரார் தமிழைப் பற்றிக் கூறுவது யாது ?
3. தமிழ்ச் சங்கத்தைப் பற்றி விரிவாகக் கூறும் நூல் எது ?
4. தொல்காப்பியம் எப்பொழுது இயற்றப்பட்டது ?
5. ஆற்றுப்படை என்பது யாது ?
6. குறிஞ்சிப் பாட்டு பாடக் காரணம் யாது ?
7. அகம் என்பது யாது ?
8. புறம் என்பது யாது ?
9. பத்துப் பாட்டில் புகழப்பட்ட மன்னர்கள் யாவர் ?
10. எட்டுத் தொகையில் அடங்கிய நூல்கள் எவை ?
11. எட்டுத் தொகையில் புறப்பொருள் பற்றிய நூல்கள் எவை?
12. பரி பாடலின் சிறப்பு யாது ?
13. பண்டைக்காலத்தில் பெண்கல்வி சிறந்த நிலையில் இருந்தது என்பது எவ்வாறு விளங்கும் ?
14. அந்தாலஜி என்ற சொல்லின் பொருள் யாது ?
15. தமிழ் நூல்களை எவ்வாறு கிரேக்க நூல்களுடன் ஒப்பிடலாம் ?
16. ‘இனம் இனத்தோடு சேரும்’ என்ற பழமொழியைக் கண்ணகனார் எவ்வாறு விளக்குகின்றார் ?

# 2. பண்டைத் தமிழர் வாணிகம்

[வித்துவான். வே. வேங்கடராசுலு ரெட்டியார்]

நந்தம் தமிழ் நாட்டிற்குப் பண்டைக்காலத்தில் தமிழகம் என்னும் பெயர் வழங்கி வந்தது. தமிழகம் நெடுங்காலத்திற்கு முன்னரே சிறந்த நாகரிகம் படைத்து, உயர்நிலையில் ஒளிர்வுற்றிருந்தது. அக்காலத்துத் தமிழ் மக்கள் கல்வி, கைத்தொழில், வாணிகம், அரசியல், இல்வாழ்க்கை முதலிய பல துறைகளிலும் மேம்பாடு எய்தியிருந்தனர் என்பது ஒருதலை. ஈண்டு, அவர்களது வாணிகச் சிறப்பினைச் சிறிது கூறுவோம்:

ஏறக்குறைய இரண்டாயிரம் யாண்டுகளுக்கு முன்னரே தமிழ் மக்கள் பிறநாட்டவரோடு வாணிகம் நடத்தி வந்தவர். கிரீஸ், ரோமாபுரி முதலிய ஐரோப்பிய நாட்டினர், அக்காலத்தில் நம் நாட்டின் விளைபொருள்களை யறிந்து விரும்பி வந்து, அவற்றைக் கொள்வா ராயினர். வாணிகத்தின் பொருட்டு நமது நாட்டினின்று ரோம் தேசத் திற்குத் தூதுசென்ற செய்தி, வரலாற்று நூல்களான் அறியப்படுகின்றது. கி. பி. முதல் நூற்றுண்டில் வாழ்ந்தவராகிய **ப்ளினி** என்னும் யவன ஆசிரியர் எழுதியுள்ள வரலாறுகளால், நம் நாட்டு வாணிகச் செய்திகள் சில அறியவருகின்றன. அவையாவன, ஐரோப்பாவினின்று நமது நாட்டிற்குக் கப்பல்கள் வரும் வழியும், நமது நாட்டினின்று ஐரோப்பாவிற்குக் கொண்டு செல்லும் பலவகைப் பொருள்களின் விலையும், நமது நாட்டிலுள்ள முக்கியமான துறைமுகங்களின் நிலையும் பிறவுமாம்.

அக் காலத்தை யடுத்து எழுதப்பட்ட **பெரிப்ளூஸ்** என்னும் நூலினும், மேலைக் கடற்கரையிலுள்ள **முசிறி** என்னும் துறைமுகப் பட்டினத்தில், ஐரோப்பிய நாட்டினின்று மரக்கலங்கள் வந்து தங்கி யிருக்கும் என்றும், ஆண்டுக் கலங்கள் தங்குதற்கு ஏற்ற அமைதி யுண்டு என்றும், ஈயம் தகரம் கண்ணாடி மது முதலிய பொருள்களை விற்றுவிட்டு, மிளகு யானைமருப்பு வயிரம் பவழம் வெற்றிலை பட்டாடை முதலியவற்றை இங்குநின்றும் கொண்டு செல்வர் என்றும் எழுதப் பட்டுள்ளன. இவையே யல்லாமல் நெய் தோகைமயிர் முதலிய பொருள்களையும், குரங்கு கடுவாய் யானை முதலிய விலங்குகளையும்,

மயில் கிளி முதலிய பறவைகளையும் இங்கிருந்து கொண்டுபோயின எனவும் அறியவருகின்றது.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த யவன ஆசிரிய ராகிய தாலமி என்பவரும் நம் நாட்டு வாணிகத்தைக் குறித்துத் தம் நூலில் எழுதியுள்ளார். சிறந்த துறையாகிய முசிறியையும், கருவூர் கன்னியாகுமரி முதலிய ஊர்களையும், பெரியாறு தாமிரவருணி முதலிய யாறுகளையும் பற்றிய செய்திகள் அவர் நூலிற் காண்கின்றன. அன்றி யும், முசிறியில் ரோம் தேசத்தவர்களின் ஆலயம் ஒன்று அமைந் திருந்தது என்னுஞ் செய்தியும் அறியப்படுகின்றது. இது நிற்க.

தமிழ் நாட்டில், வேலூர் மதுரை முதலிய இடங்களில் வெட்டி யெடுக்கப்பட்டுள்ள நாணயங்களாலும் வாணிகச் செய்தி வலியுறு கின்றது. அவை கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த **க்ளாடியஸ்** என்னும் அரசன் முதலியோர் காலத்தவை என்று அறியப்படுதலின், அக்காலத்திலேயே ரோம் தேயத்தோடு நம் நாட்டவர் வாணிகஞ் செய்து வந்தனர் என்பது திண்ணம். இவையேயன்றி, பிறநாட்டு வாணிகத் தைக் குறித்துப் பண்டைத் தமிழ் நூல்களிலும் சில செய்திகள் கூறப் பட்டுள்ளன. அவற்றை இனி நோக்குவோம்.

பண்டைத் தமிழ் நூல்களுள் ஒன்றாகிய அகநானூற்றில், 'சேரர் களுக்கு உரிய முசிறி என்னுந் துறைமுகப் பட்டினத்தில், யவனருடைய கப்பல்கள் பொன்னைக் கொண்டுவந்து கொடுத்து மிளகு வாங்கிக் கொண்டு மீளும்' என்று கூறப்பட்டுள்ளது. அன்றியும், அக்கப்பல் கள் முசிறியை யடுத்துப் பாயும் பேராற்றில் வந்து தங்கும் என்பதும் குறிக்கப்பட்டுளது. புறநானூறு என்னும் தொகைநூலில், 'முசிறித் துறைக்கண், கப்பலில் வந்த பொன்னை மிளகின் விலைக்குப் பெற்று, அதனைத் தோணியில் வைத்துக் கரைக்குக் கொண்டுவருவர்' எனக் கூறப்பட்டுளது. அக்காலத்தில், மேல்நாடுகளிலிருந்து சிறந்த தேன் வகைகள் நம்நாட்டிற்கு வருதல் உண்டு. அரசர்கள் அவற்றை விரும் பிப் பெற்று அருந்தி இன்புறுவர். மேற்கூறியவற்றால், முசிறித்துறை கப்பல் வந்து தங்குதற்கு ஏற்ற வசதியுடையதாயிருந்தது என்பது புல னாகும், இவ்வுண்மை, 'சேரவேந்தருடைய முசிறிப்பட்டினத்தில், எகிப்துதேசத்துக் கப்பல்களும் பிறவும் வந்து தங்குகின்றன. அது, மிக்க வளமுள்ள நகரமாய் இலகுகின்றது'' என்று **பெரிப்ளூஸ்** என் னும் நூலிற் கூறப்பட்டுள்ளதனாலும் வலியுறும்.

பண்டைத் தமிழ்நூல்களில் யவனருடைய பெயர் பலவிடங்களில் காண்கின்றது. அவற்றில் அப்பெயர், கிரீஸ்தேசத்தவரையும் ரோம் தேசத்தவரையும் குறிப்பதாகும். அரேபியா தேசத்தவரைக் குறிக்கும் இடனும் உண்டு. இதனை ஆராய்கையில், யவனர் என்னும் பெயர், முதன் முதலில் கிரேக்கரைக் குறித்து வழங்கியது எனவும், பின்னர் அஃது உரோமர் முதலியோரைக் குறிக்கலாயிற்று எனவும் தோன்றுகின்றது. முதற்கண் வரும் புறநாட்டவர்க்கு வழங்கும் பெயர், பின்னர் வரும் புறநாட்டவர்க்கும் வழங்குதல் உண்டு. மலையாளிகள், புறநாட்டவராகிய முஸ்லீம்களை வழங்கிய 'ஸாயபு' என்னும் பெயரையே ஐரோப்பியருக்கும் வழங்குதல் ஈண்டைக்கு அறியத்தக்கதாகும். இவ்வாறே கன்னடரும் முஸ்லீம்களுக்கு வழங்கிய 'ஸாஹேபர்' என்னுஞ் சொல்லை ஆங்கிலேயருக்கும் வழங்குதல் இவ்வழக்கினை வலியுறுத்தும்

பண்டைக்காலத்தில், மேலைக்கடல் சேரவேந்தருக்கு உரிமையுடையதா யிருந்தது. அக்கடலில், அவருடைய கலங்களே செல்லலாகும்; அவரது ஆணையின்றிப் பிறர்கலங்கள் அங்குச் செல்லுதல் கூடாது. சேரர், பெருங் கடலில் கருங்கலங்களைச் செலுத்துதலில் தேர்ந்தவராய்த் திகழ்ந்திருந்தனர்.

நம் நாட்டில் துறைமுக நகரங்கள் பலவற்றிலும் பல்வேறு நாட்டினர் தங்கியிருப்பர். சோழருக் குரிய புகார்நகரத்தைக் கூறுமிடத்து இளங்கோவடிகள்,

> 'பயனற வறியா யவன ரிருக்கையும்
> கலந்தரு திருவின் புலம்பெயர் மாக்கள்
> கலந்திருந் துறையும் இலங்குநீர் வரைப்பும்
> ஓசுநர் செறிந்த ஊன்மலி யிருக்கையும்'

உள்ளன என்று உரைத்திருப்பது அறியத் தக்கது. அந்நகரில் உயர்ந்தோங்கிய கலங்கரை விளக்கம் இலங்கியிருந்தது. சாவக நாட்டினருக்கும் நம் நாட்டினருக்கும் வாணிகம் நடந்துவந்த செய்தி, மணிமேகலை என்னுங் காப்பியத்தானும் நன்கு அறியப்படும். கடாரத்திலிருந்து இரும்பும், ஈழத்திலிருந்து செம்பும், யவனத்திலிருந்து பொற்பணிகளும் இந்தத் தேயத்திற்கு வந்தன என்று பெருங்கதை என்னும் பழங்காப்பியம் பகரும். சேய்நாட்டினின்று பெரிய மரக்கலங்கள், கடும்பரிகளைக் கொண்டு ஒருங்கு கூடிவந்து, பாண்டியநாட்டில் பகர்ந்து செல்லும் என்பது மதுரைக்காஞ்சியால் அறியவருகின்றது.

இனி, புகார்நகரத்தின் துறைநிலையைக் குறித்துப் பண்டை நூலிற் கூறியிருப்பனவற்றை ஈண்டு நோக்குவோம்:

புகார்த்துறைக்கண், ஈழத்தினின்று வந்த உணவுப்பொருள்களும், கடாரத்தினின்று வந்த விளைபொருள்களும், கங்கையாற்றினின்று வந்த மணியும் பொன்னும் களிறும், இமயமலையினின்று வந்த மணியும் பொன்னும், பொதியமலையினின்று வந்த ஆரமும் அகிலும், தென்கடலிற் பிறந்த தரளமும், கீழ்க்கடலிற் பிறந்த பவளமும், மேல்மலையில் விளைந்த கறியும், கலங்களில் வந்த சிறந்த புரவிகளும், கருப்பூரம் முதலிய சிறப்புடைப் பொருள்களும், பிறவும் எந்நாளும் ஒழிவின்றி இலங்கும். ஆங்கு, நீரில்வந்த பொருள்களை நிலத்திற் பரப்புவர்; நிலத்தில் வந்த பொருள்களைப் புலிப்பொறி பொறித்து, கலத்தில் ஏற்றுவர்; பொதிகளைப் போராக அடுக்குவர். துறையாளர் பொருள்களை நிறுத்து வரி விதிப்பர். காவலர், கடற்கரையில் நொடியளவும் மடிவின்றி ஆங்காங்கே பொருள்களை நோக்கிக் கொண்டு சூழ்ந்து திரிவர். ஆதலின், அப்பொருள்களைக் களவுகோடற்குப் பிறர் உளம் நடுங்குவர்.

அத்துறையின் சார்பில், பல்வேறு தேயத்தினின்றும் வந்து தங்கியிருக்கும் பல்வேறு மொழியாளரும் தம்முட் கலந்து மகிழ்ந்து இன்புறுவர். ஆதலின், அந்நகர் வாணிகத்தொழிலிற் சாலச் சிறந்து விளங்கிற்று என்பது யாவர்க்கும் உடன்பாடேயாகும். அக்காலத்திலேயே தமிழ்மக்கள் கருங்கடலிற் பெருங்கலங்களைச் செலுத்துதலில் பயிற்சி மிக்கிருந்தனர் என்பது சிறப்புடையதேயாம். இது நிற்க, இனி உள்நாட்டு வாணிகத்தை ஒருசிறிது நோக்குதும் :

பண்டைக்காலத்தில் நந்தம் தமிழ் நாட்டில் பலவகைத் தொழில்களும் நிகழ்ந்துவந்தன. பட்டினுலும் பருத்தியினுலும் எலிமயிர் முதலிய மயிரினுலும் பலவகை ஆடைகள் நெய்தனர்; கிழியானும் கிடையானும் தொழில்பல பெருக்கினர். ஐவகைத் தொழிலாளரும் தத்தம் வினைத்திறத்தில் மேம்பாடுற்றிருந்தனர். ஆதலின், பலவகைப் பொருள்களை மறுகிடைப் பகருவர். அக்காலத்தில், மதுரைநகரில் நிகழ்ந்த வாணிகத்தைக்குறித்துக் கூறியிருப்பனவற்றை ஈண்டுச் சிறிது கூறுவோம்:

அந்நகரில் ஒருபால், பலவகையான பண்டிகளும் கவசங்களும் கிடுகுகளும் குத்துக்கோல்களும் ஈர்வாள் முதலியவும் விற்கப்படும். ஒருபால் செம்பு வெண்கலம் முதலியவற்றுல் சமைத்தனவும், யானை

யின் மருப்பினுல் இழைத்தனவும், கயிற்றினுல் முடித்தனவும் பரப்பி வைத்திருப்பர். ஒரு சார், வயிரம் மரகதம் மாணிக்கம் புருடராகம் வயிடூரியம் நீலம் கோமேதகம் முத்து பவளம் என்னும் நவமணிக் கடைகளும், சாதரூபம கிளிச்சிறை ஆடகம் சாம்பூநதம் என்னும் நால்வகைப் பொற்கடைகளும் பொலிவுறும்.

ஒரு சார், பட்டினுலும் பருத்தியினுலும் எலிமயிராலும் செய்யப் பட்ட பலவகை அறுவைகளும், ஒரு சார், நெல் புல் வரகு தினை சாமை இறுங்கு தோரை வெதிர்நெல் என்னும் எண்வகைத் தானியமும், எள் கொள் உழுந்து பயறு துவரை கடலை அவரை மொச்சை என்னும் எண்வகைத் தவசமும் என்றும் விலையாகும்; வேறு பல பொருள்களும் விற்கப்படும்.

மேற்கூறியவற்ருல் நம் நாட்டின் இருவகைப்பட்ட வாணிகத்தின் பெருஞ்சிறப்பும் இனிது விளங்கும்.

பண்டைத் தமிழ்மக்கள் வாணிகத்தில் தேர்ந்திருந்தனராதலின், அவர்கள் எண்ணும் எழுத்தும் நன்கு பயின்றிருத்தல் வேண்டும் என்பது தானே போதரும். ஆயிரம் வரைக்கும் உள்ள எண்ணின் பெயர்களும், வெள்ளம் ஆம்பல் என்னும் பேரெண்களும், ஒன்றற்குக் கீழ்ப்பட்ட சிற்றெண்களும், ஆழாக்கு உழக்கு உரி கலம் முதலிய அள வுப்பெயர்களும், மஞ்சாடி கழஞ்சு தொடி முதலிய நிறைப் பெயர் களும், பிறவும் தனித் தமிழ்ப்பெயர்களாகக் காணுதலே பண்டைத் தமிழ்மக்களின் கணிதநூற் புலமையைத் தெளிவுறக் காட்டும். இற் றைக்கு இரண்டாயிரம் யாண்டிற்கு முற்பட்ட தொல்காப்பியம் என் னும் இலக்கணநூலில், நிறைப்பெயர், அளவுப்பெயர், எண்ணுப் பெயர்களைக் கூறியிருப்பதே பண்டைத் தமிழ் மக்களின் எண்ணுப் பயிற்சிக்கு இயைபுடைச் சான்ருகும். அன்றியும்,

> 'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
> கண்ணென்ப வாழும் உயிர்க்கு'

என்னும் முதுமறை, பழைய தமிழ்மக்கள் எண்ணிலும் எழுத்திலும் கண்ணிய ஊற்றத்தைத் தெள்ளிதின் தெரிவிக்கும். அக்காலத்தில் வாணிகர், கொள்வதூஉம் மிகை கொள்ளாது கொடுப்பதூஉம் குறை கொடாது' வாணிகம் நடத்தி வந்தனர் என்பதை உளங்கொள் வோர்க்கு, அவரது வாணிக முறைமை தானே நன்கு விளங்கும்.

பொருள் தருக:—

ஒளிர்வுற்று, யானை மருப்பு, கடுவாய், கருங்கலங்கள், இருக்கை, திரு, புலம்பெயர் மாக்கள், ஓசுநர், ஊன்மலி, பொற்பணி, கடும்பரி, மறுகு, கிடுகு, அறுவை.

II. வாக்கியங்களில் அமைத்தெழுதுக:—

நொடியளவும் மடிவின்றி, உளம் நடுங்குவர், சாலச்சிறந்து, ஈண்டு, பொலிவுறும், போதரும், உளங்கொள்வோர்க்கு.

III. விடை கூறுக:—

1. ப்ளினி என்பவர் யார்?

2. அவர் காலம் எது?

3. பெரிப்ளூஸ் என்பது யாது? அதனால் நாம் அறிவன யாவை?

4. தாலமி காலத்தில் விளங்கிய துறைகள் எவை?

5. தமிழர் ரோம் நாட்டாரோடு வியாபாரம் செய்தனர் என்று கூறக் காரணமென்ன?

6. பண்டைக் காலத்தில் முசிறித்துறை சிறந்து விளங்கிய தென்பதை எவ்வாறு அறியலாம்?

7. தமிழர் வாணிகத்தைப் பற்றிப் பெருங்கதை கூறும் கருத்துக்கள் யாவை?

8. புகார்த் துறைக்கண் வந்து இறங்கும் பொருள்கள் யாவை?

9. பண்டைக் காலத்தில் மதுரையில் நடந்த வாணிகத்தைக் குறித்து உனக்கு என்ன தெரியும்?

10. பண்டைத் தமிழர் எண்ணுப் பயிற்சி மிக்குடையவர் என்பது எதனால் விளங்கும்?

11. ஆம்பல், மஞ்சாடி, உரி - பொருளை விளக்குக.

# 3. இரட்டைப் புலவர்

**மணி. திருநாவுக்கரசு முதலியார்**

இற்றைக்குச் சற்றேறத்தாழ நானூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர்ச் சோழவள நாட்டின்கண் ஆமிலந்துறை என்னும் ஊரிலே செங்குந்தர் மரபிலே இருவர் தோன்றினார். இவ்விருவரும் ஒருவரையொருவர் எவ்வாற்றானும் ஒத்திருந்தமையானும், ஒருங்குசேர்ந்து செய்யுள் பாடி வந்தமையானும் இரட்டையர் என வழங்கப்பட்டனர். இவர் தம்முள் ஒருவர் முடவர்; மற்றவர் குருடர். முன்னை வினைப்பயனாலே கால் முடம் பட்டாரேனும் அறிவான் முடம்பட்டிலர் முடவர்; முகக்கண் ஒழிந்தும் அகக்கண் விளங்கப் பெற்றார் குருடர். இவ்விருவருக்கும் முதுசூரியர் என்றும் இளஞ்சூரியர் என்றும் முறையே பெயர் வழங்கலாயின. முடவர், குருடர் தோள்மீது இவர்ந்து அவருக்கு வழி காட்டுவர்; குருடர் முடவரைச் சுமந்து செல்வர். இவ்விருவரும் உறவின் முறையால் ஒருவருக்கொருவர் அம்மான் சேயாகவும், அத்தைமகனாகவும் அமைந்தனர். இவர், திருவருட் செல்வம் பெற்றவராய்க் கல்வி வளம் பழுத்த இனிய செந்தமிழ்ப் பாக்களை முயற்சியும் உழைப்புமின்றி எளிதாகப் பாடிய காரணத்தாலே தெய்வப் புலவர் எனவும் சிறப்பித்தோதப் பெறுவர்.

இப்புலவர் தமது சமயமாகிய சைவ சமயத்திலே பெரும்பற்றும் அன்பும் உடையராய்த் திகழ்ந்தனர். தமது வாழ்நாள் முழுவதும் சிறந்த திருத்தலங்களுக்குச் சென்று, ஆங்காங்குக் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள அருட்பெருங்கடவுளைப் பலவாறு கனிவு தோன்றப் பழிச்சுதலும், தணிவு தோன்ற உள்ளமுருகிச் சிந்தித்தலும், பணிவு தோன்றத் தலையாரக் கும்பிட்டு வணங்குதலும் ஆகிய இவற்றையே அரும்பெருந் திருப்பணியாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர்; அக்காலத்துச் செந்தமிழ் நாட்டிலே வதிந்த செல்வரை யணுகி, அவர்மீது அரிய பெரிய தமிழ்ச் செய்யுட்களைப் பாடிப் பரிசு பெற்று அதனால் வாழ்ந்து வந்தனர். ஒவ்வொரு பாட்டையும் இருவரும் கலந்தே பாடுதல் இவருக்கு இயல்பு. ஒவ்வொரு நூலையும் இருவரும் சேர்ந்தே பாடி முடிப்பர். ஒரு பாட்டில் அரைப்பகுதியை ஒருவர் பாடி முடிக்க மற்றப் பகுதியைக் கருத்துப் பிறழாது சொல்வகையும் ஒப்ப, ஒருவரே பாடியதுபோலத் தோன்றுமாறு மற்றவர் பாடி முடிப்பர். இப்பரிசு

எவரானும் பாராட்டப்படு மென்பதில் ஐயமுண்டோ? உறுப்பானும் புலத்தானுங் குறைபாடுடைய இவ்விருவரும் கல்வி கற்றலே அருமை! அதனினுங் கவி பாடுவதென்றால் அ∴து அருமையினும் அருமை யன்றோ! அங்ஙனம் பாடுங் கவிகளும் சொற்சுவை பொருட்சுவை செறிந்திருத்தல் எல்லாவற்றினும் அருமையாதலை மறுப்பார் யாவர்? இதனால் இவர் கற்றார் கல்லாதார் ஆகிய எல்லாரானும் நன்கு மதிக்கப் பட்டுத் தெய்வப் பாவலர் என்னும் புகழுரையும் பெற்று இனிதுறைவா ராயினர்.

இவ்விருவரும் சிவஸ்தல யாத்திரை செய்து போதருங்கால், ஒரு நாள் பூலோக கைலாயம் எனப் புகழ் பெற்ற சிதம்பரத்துக்குச் சென்று, ஆண்டு, பொன்னம்பலத்தே வீற்றிருக்கும் இன்னமுதை இரு கண்களாலும் பருக விழைந்து, கோயிலுக்கு வழிக்கொண்டனர். அப் போது இடைவழியில் செல்வ மிக்குடைய ஒருவன், ஆடை அணிகள் மட்டுமிதமின்றி அணிந்து போதலை முடவர் கண்ணுற்றுப் பரிசிலைக் கருதி, அவனைப் புகழ்ந்து முதலிரண்டடி தொடுத்துப் பாட, குருடர் பின்னிரண்டடி பாடி முடித்து நின்றனர். அவிழ்ச்சுவையே யன்றித் தமிழ்ச்சுவை யறியாத அச்சீமான் செல்வச் செருக்கால் நிமிர்ந்து நெடு மரம்போல் நின்றான். அந்நகைமையைக் கண்ட முடவர்,

மூடர்முன்னே பாடல் மொழிந்தால் அறிவரோ
ஆடெடுத்த தென்புலியூர் அம்பலவா—

என்று துவங்கிப் பாடினார். அக்குறிப்பினை அறிந்த குருடர் கவிப் பொலிவைக் காணற்குரிய கண் அச்செல்வற்கில்லை என்பதை உணர்ந்து,

—ஆடகப்பொற்

செந்திருவைப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயக னானால்.

எனக் கூறி முடித்தனர். அப்பாட்டைக் கேட்டார் பலர் அதன் பொருளை வியந்து, அச்செல்வனுக்கு இவர்தம் அருமை பெருமைகளை எடுத்துரைத்தனர். அதன் பின்னர், அவனும் தனது குற்றத்தை யுணர்ந்து அவரை உபசரித்து, வேண்டும் பரிசிலளித்துக் கொண்டாடி னான்.

பின்னொருகால் இரட்டையர் சிவராசதானியாகிய மதுரைமாநகரஞ் சென்று, ஆலவாயின் அவிர்சடைக் கடவுளைத் தரிசிக்க விழைந்து, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடப் புக்கனர். அப்போது முடவர் கரையின் மேல் அமர்ந்திருந்தனர். குருடர் படித்துறையில் இறங்கித் தமது ஆடையைத் துவைத்து அலசும் பொழுது, அது கையினின்று நழுவி விட்டது. நழுவிய ஆடையைத் தேடித் தண்ணீரைத் தடவித் தடவி நண்பர் தவித்தலைக் கண்ணுற்ற முடவர்,

> அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
> தப்பினல் நம்மையது தப்பாதோ?

எனக் கூறி மைத்துனக் கேண்மையான் எள்ளி நகையாடினர். அது கேட்ட குருடர் நாணி,

> —அப்படியே
> ஆனாலும் கந்தை, அதிலுமோர் ஆயிரங்கண்;
> போனால் துயர்போச்சுப் போ.

என்று இயம்பினர். அதுகேட்ட முடவர்,

> கண்ணாயிரமுடைய கந்தையே ஆனாலும்
> தண்ணார் குளிரையுடன் தாங்காதோ?

என்று மீண்டுஞ் செப்பக் குருடர்,

> —எண்ணாதீர்
> இக்கலிங்கம் போனாலென்? ஏகலிங்க மாம்மதுரைச்
> சொக்கலிங்கம் உண்டே துணை.

என்று விடையிறுத்தனர். உடனே அவ்வாடை காற்றால் உந்தப்பட்டுக் கரை சேர்ந்தது. பின் இருவரும் சொக்கலிங்கப் பெருமானையும் அங்கயற் கண்ணியையும் தொழுது மீண்டு, அத்தலத்தின்கண் சின்னாள் வதிவாராயினர்.

இரட்டையர் ஒருகால் ஆசுகவி பாடுவதில் தமக்கிணை தாமே யாகிய காளமேகப் புலவரைச் சந்தித்து அவருடன் கமலாலயம் எனச் சீர்த்திபெற்ற திருவாரூரை அடைந்து, தியாகராயப் பெருமானை முருகி வளர்ந்த அன்போடு வணங்கினர். அப்போது குருடர் சிவபெருமானைப் பாவால் பரவ நினைந்து,

> நாணென்றால் நஞ்சிருக்கும், நற்சாபங் கற்சாபம்
> பாணந்தான்...

என்ற அளவில் அவருக்கு நாத்தடைப்பட்டது. முடவருக்கும் அதனை முடிக்கச் சீர் வரவில்லை. இருவரும் ஆழ்ந்து சிந்திக்கத் தலைப்பட்ட அளவில், அவ்வேளை அருகே யிருந்த காளமேகப்புலவர் உடனே 'மண்டின்ற பாணமே' என்றனர். இச்சீர் எழுந்த மாத்திரையானே முடவர்,

— தாணுவே

சீராரூர் வாழுஞ் சிவனே சிரிப்பன்றே
நேராரூர் செற்ற நிலை.

என்று கூறி, வெண்பாவை நிரப்பினர். பின்னர், இரட்டையரும் காளமேகப் புலவரும் ஒருவரோ டொருவர் அளவளாவி,

'உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்'

என்னுந் தமிழ்மறையின்படி, மிக வருத்தத்துடன் பிரிவாராயினர்.

சில்லாண்டுகள் சென்ற பின்பு இரட்டையர் திருவானைக்காவிற்குச் சென்று திருக்கோயில் வழிபாடு புரிந்து, காளமேகப் புலவரைக் காண விழைந்து அவரகத்துக்குச் சென்றனர் ; அப்போது அங்குள்ளார் அன்றுதான் அவர் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தாரெனவும், அப்போதுதான் அவரது யாக்கை சுடலைக்குக் கொண்டு போகப்பட்ட தெனவும் இயம்பக் கேட்டு, நடுக் கடலிற் கவிழ்ந்த கலம்போல் வருந்திச் சுடலைக்கு விரைந்து சென்றனர். ஆண்டுப் பிணம் வேதலைக் கண்டு மீளாத் துயருற்று,

ஆசு கவியால் அகில உலகெங்கும்
வீசு புகழ்காள மேகமே! — பூசுரா!
விண்தின்ற செந்தழலில் வேகுதே, ஐயையோ!
மண்தின்ற பாணமென்ற வாய்.

என்று பாடிப் புலம்பினர்.

இளமையிலே கவி பாடுந்திறன் வாய்க்கப் பெற்று, கலம்பகம், உலா முதலிய சிறந்த பிரபந்தங்களைப் பாடி முடித்த செந்தமிழ்ப் புலவ ராகிய இரட்டையர் இருவரும் சிறிது காலஞ் சென்றபின் ஒருங்கே செம்பொருளின் அம்புயத்தாள் சேர்ந்தனர்.

I. பொருள் கூறுக:—

*சமயம், பழிச்சுதல், பரிசு, புலம்.*

II. வாக்கியங்களில் அமைக்க:—

*திருவருட் செல்வம், வினைப்பயன், உள்ள முருகி,*

III. விடை தருக:—

1. *இரட்டையர்——ஊரும், மரபும் கூறுக.*
2. *இரட்டையர் எக்காரணம் பற்றித் தெய்வப் புலவர் எனப் பட்டனர்?*
3. *இரட்டையர் எவ்வாறு வாழ்ந்து வந்தனர்?*
4. *கற்றாரும், கல்லாதாரும் இரட்டையரை நன்கு மதிக்கக் காரணம் யாது?*
5. *பூலோக கைலாயம் எனப்படுவது எது?*
6. *நெடுமரம் போல் நின்றவன் யார்?*
7. *செல்வனைக் கண்டு முடவர் யாது பாடினர்? குருடர் யாது பாடினர்?*
8. *ஆடை நழுவிச் சென்றதும், குருடருக்கும் முடவருக்கும் நடந்த உரையாடலைச் சுருக்கிக் கூறுக?*
9. *புலவர் தொழில் யாது?*
10. *மண்டின்ற பாணமே—என்ற தொடர் யாரால் முதலில் பாடப்பட்டது? எப்பொழுது?*

# 4. பழந்தமிழ் உரை நடை

## 1. இறையனார் அகப்பொருள் உரை

1. அக்காலத்துப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது. செல்லப் பசிகடுகலும், அரசன் சிட்டரை யெல்லாங் கூவி, "வம்மின், யான் உங்களைப் புரந்தரகில்லேன். என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீர் போய் நுமக்கறிந்தவாறு புக்கு, நாடு நாடாயின

ஞான்று என்னை உள்ளி வம்மின்" என்றான். என, அரசனை விடுத்து எல்லோரும் போயினர். பின்றைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பின்னர், நாடு மலிய மழை பெய்தது. பெய்த பின்றை அரசன், "இனி நாடு நாடாயிற்றாகலின் நூல் வல்லாரைக் கொணர்க" என்று எல்லாப் பக்கமும் ஆட் போக்க, எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, "பொருளதிகாரம் வல்லாரை எங்கும் தலைப்பட்டிலேம்" என்று வந்தார். வர, அரசனும் புடைபடக் கவன்று, "என்னை! எழுத்தும் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே? பொருளதிகாரம் பெறேமெனின் இவை பெற்றும் பெற்றிலேம்" எனச் சொல்லா நிற்ப, மதுரை ஆலவாயில் அழல் நிறக் கடவுள் சிந்திப்பான்: "என்னை பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று; அது நானும் ஞானத்திடையதாகலான், யாம் அதனைத் தீர்க்கற்பாலம்" என்று இவ்வறுபது சூத்திரத்தையும் செய்து மூன்று செப்பிதழகத் தெழுதி, பீடத்தின் கீழிட்டான்.

## 2. இளம்பூரணர் உரை நடை

எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்கவென்பது மரபு. என்னை? "ஆயிர முகத்தா னகன்றதாயினும், பாயிரமில்லது பனுவலன்றே" என்பவாகலின். பாயிரமென்பது புறவுரை. அது நூற்குப் புறவுரையேல் அது கேட்டு என்னை பயனெனின், கற்று வல்ல கணவற்குக் கற்புடையாள் போல இன்றியமையாச் சிறப்பிற்றாயும், திருவமைந்த மாநகரத்திற்கு உருவமைந்த வாயின் மாடம் போல அலங்காரமாதற் சிறப்பிற்றாயும் வருதலானும், பாயிரம் கேளாதே நூல் கேட்குமே யெனில் குறிச்சி புக்க மான் போல மாணுக்கன் இடர்ப்படுமாகலானும், பாயிரம் கேட்டல் பயனுடைத்தாயிற்று. அப் பாயிரம் பொதுவும் சிறப்பும் என இரு வகைத்து. எல்லா நூன்முகத்தும் பொதுவாக உரைக்கப்படுதலிற் பொதுவெனப் பட்டது. "ஈவோன் றன்மை" முதலிய நூலுட் சொல்லும் பொருளல்லாத புறப் பொருளைக் கூறும் பொதுப்பாயிரம் போலாது நூலகத்தெல்லாம் பயத்தன் மாத்திரையேயன்றி அந்நூலிற் சொல்லப்படுகின்ற பொருள் முதலிய உணர்த்தலின் அணியிழை மகளிர்க்கு அவ்வணியிற் சிறந்த ஆடைபோல நூற்குச் சிறத்தலால் சிறப்பெனப்பட்டது. [தொல்காப்பியம், எழுத்ததிகாரம்.]

## 3. பரிமேலழகர் உரைநடை

கடவுள் வாழ்த்தாவது, கவி தான் வழிபடு கடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். வான்சிறப்பாவது அக்கடவுளது ஆணையால் உலகமும் அதற்குறுதியாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். இல்வாழ்க்கையாவது இல்லாளோடு கூடி வாழ்தலினது சிறப்பு. வாழ்க்கைத்துணை நலமென்பது அவ்வில் வாழ்க்கைத் துணையாகிய இல்லாளது நன்மை. அன்புடைமையாவது வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனாதல். இல்லறம் இனிது நடத்தலும், பிற வுயிர்கண்மேல் அருள் பிறத்தலும் அன்பின் பயனாகலின், இது வேண்டப்பட்டது. இனியவை கூறலாவது மனத்தின் கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனிய சொற்களைச் சொல்லுதல், நடுநிலைமையாவது, பகை, நொதுமல், நண்பு என்னும் மூன்று பகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை. இது நன்றி செய்தார்மாட்டு அந் நன்றியினை நினைத்தவழிச் சிதையுமன்றே, அவ்விடத்தும் சிதையலாகாதென்றற்கு செய்ந்நன்றியறிதலின் பின் வைக்கப்பட்டது. அடக்கமுடைமையாவது மெய் மொழி மனங்கள் தீநெறிக்கட் செல்லாது அடங்குதலுடையனாதல். அஃது ஏதிலார் குற்றம்போற் றங்குற்றமும் காணும் நடுவு நிலைமையின் பின் வைக்கப்பட்டது.

## 4. நச்சினார்க்கினியர் உரைநடை

எழுத்தென்றது யாதனை யெனின், கட்புலனாகா உருவுங் கட்புலனாகிய வடிவு முடைத்தாக வேறு வேறு வகுத்துக்கொண்டு தன்னையே உணர்த்தியுஞ் சொற்கு இயைந்தும் நிற்கும் ஓசையையாம். கடலொலி சங்கொலி முதலிய ஓசைகள் பொருளுணர்த்தாமையானும், முற்கு, வீளை, இலதை முதலியன பொருளுணர்த்தினவேனும் எழுத்தாகாமையானும் அவை ஈண்டுக் கொள்ளாராயினர். ஈண்டு உருவென்றது மனனுணர்வாய் நிற்கும் கருத்துப் பொருளை. அது செறிப்பச் சேறலானுஞ் செறிப்ப வருதலானும் இடை யெறியப்படுதலானும் இன்ப துன்பத்தை யாக்கலானும் உருவு முருவுங் கூடிப் பிறத்தலானும் உந்தி முதலாகத் தோன்றி எண்வகை நிலத்தும் பிறந்து கட்புலனாந்தன்மையின்றிச் செவிக்கட் சென்று உறும் ஊறுடைமையானும் விசும்பிற்

பிறந்து இயங்குவதோர் தன்மை யுடைமையானுங் காற்றின் குணமாவ தோர் உருவாம். வன்மை, மென்மை, இடைமை கோடலானும் உருவேயாயிற்று. இதனைக் காற்றின் குணமே யென்றல் இவ்வாசிரியர் கருத்து. இதனை விசும்பின் குணமென்பாரும் உளர்.

I. பொருள் கூறுக:—

1. *வற்கடம், புரந்தரகில்லேன், தேயம், ஞான்று, வம்மின். புடைபடக் கவன்று, அழல்*
2. *பாயிரம், பனுவல், வாயின் மாடம், குறிச்சி,*
3. *ஏற்புடை, நொதுமல், வழூவாது.*
4. *கட்புலனாகா, வீணை, இலதை,*

II. வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—

*வற்கடகம், அணியிழை மகளிர், இன்றியமையாச் சிறப்பு, இனியவை கூறல், உந்தி.*

III. விடை எழுதுக:—

1. *வற்கடம் எவ்வளவு காலம் நீடித்தது ?*
2. *புலவர்கள் பாண்டிய நாட்டை விட்டு நீங்கக் காரணம் யாது ?*
3. *அரசன் வருந்தக் காரணம் யாது ?*
4. *அவன் யாரை வேண்டினன்?*
5. *கடவுள் எவ்வாறு உதவி செய்தார்?*
6. *பாயிரம் என்பது யாது ?*
7. *பாயிரம் கேட்பதால் பயன் யாது ?*
8. *பாயிரம் எத்தனை வகைப்படும் ?*
9. *பொதுப் பாயிரத்தின் இயல்பு யாது ?*
10. *சிறப்புப் பாயிரத்தின் இயல்பு யாது ?*
11. *இல்வாழ்க்கை யாவது யாது ?*
12. *நடுவு நிலைமை யாவது யாது ?*
13. *எழுத்து எனப்படுவது யாது ?*
14. *எண் வகை நிலம்—எவை ?*

# 5. சேரன் செங்குட்டுவன்

வித்துவான். ம. வி. இராகவன்

அமிழ்தினும் இனிய நம் தமிழ்மொழி வழங்கும் நாடு **தமிழ் நாடு.** எனவும் **தமிழகம்** எனவும் பெயர் பெறும். இத் தமிழ் நாடு முற் காலத்துச் **சேரநாடு, சோழ நாடு, பாண்டி நாடு** என முப்பெரும் பிரிவுகளாகப் பிரிந்து, முறையே **சேர சோழ பாண்டி** மன்னர்களால் புரக்கப்பட்டு வந்தது. இம் முப்பிரிவுகளுள் சேர நாடு என்பது கருவூர்ப் பிரதேசமும், கோயமுத்தூர் நீலகிரி ஜில்லாக்களும், கொச்சி திருவாங்கூர்ச் சமஸ்தானங்களும், மைசூர் நாட்டின் தென் பகுதியும், மேலைக் கடற்கரைப் பிரதேசமும் அடங்கிய நிலப்பரப்பாகும். **வஞ்சி** என்னும் மாநகர் அந்நாட்டின் கோநகராக விளங்கியது. சேர மன்னர் அப்பெருநகரில் இருந்து கொண்டு சேர நாட்டைப் பன்னெடுங்காலம் சிறப்புறப் புரந்து வந்தனர்.

அரிய கல்வியும் பெரிய செல்வமும் ஒருங்கு எய்தி, அவற்றிற்கு ஏற்பப் பேரறிவும் பெருங்கொடையும் உடையராய், ஓங்கிய தனிக்கோல் ஓச்சி நீங்காத நல்லிசையினை நிறுத்திய முடியுடைத் தமிழரசர் மூவருள்ளும் சேரரே வீரம்பற்றி ஏனை இருவரினும் சிறப்பித்துப் போற்றப்படுவோர் ஆவர். சேர மன்னர் மற்றைச் சோழ பாண்டிய மன்னர்களைப் போலவே படைப்புக் காலந் தொடங்கி மேம்பட்டு வரும் தமிழ்ப் பழங்குடியினர்; முடியும் குடையும் பிறவும் உடைய பேரரசர். இவர்கள் நெடுங்காலம் வரை பிற நாட்டு மன்னர்கட்கு அடங்காது தனியரசு செலுத்தி வந்துள்ளனர். இவர்களுட் பலர் பல காலங்களில் ஏனைச் சோழ பாண்டியர்களையும் வென்று தமிழகம் முழுவதையும் தம் கீழ்ப்படுத்தி யுள்ளனர்; சிலர் சில சமயங்களில் வடநாடுகளின் மீதும் படைகொண்டு சென்று வடவரசர் பலரையும் வென்று அடக்கி அரும் புகழ் பெற்றுள்ளனர்.

இங்ஙனம் வெற்றிச் சிறப்புடைய செல்வச் சேரர்களுள் சற்றேறக் குறைய ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் **நெடுஞ்சேரலா தன்** என்னும் பெயரிய பேரரசன் ஒருவன் வீரம் சிறந்து விளங்கினன். அவன் தன் தோள்வலியாலும், வாள்வலியாலும், படைவலியாலும் பிற மன்னரை நடுங்கச் செய்து வந்தனன்; வட நாடுகளின் மீது படை யெடுத்துச் சென்று, இமயமலை வரையில் உள்ள அரசர்களை அடக்கி,

தன் வெற்றிக் குறியாக இமயமலையில் தன் குடிக்குரிய இலச்சினையாகிய வில்லைப் பொறித்துவிட்டு மீண்டனன். அதுமுதல் அவன் அச் சிறப்புப் பற்றி **இமய வரம்பன்** என்னும் அடைமொழியோடு **இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன்** என அழைக்கப்பட்டனன். அவனுக்கு இரண்டாவது மனைவியின் வயிற்றில் **செங்குட்டுவன், இளங்கோ** என்னும் வரம்மிகு மைந்தர் இருவர் தோன்றி வளமுற வளர்ந்து வந்தனர். அழகும் ஆண்மையும் ஆற்றலும் சிறந்த அம் மைந்தர் இருவரும் மொழிக்கல்வியும் படைக்கல்வியும் பாங்குறப் பயின்று அவற்றில் தேர்ச்சி பெற்று விளங்கினர்.

ஒரு நாள் அவ்விளைஞர் இருவரும் தம் தந்தையாரோடு அரசவை யில் ஒருங்கு அமர்ந்திருந்தனர். அவ்வமயம் அங்குப் போந்த நிமித்தி கன் ஒருவன் அவ்விருவரையும் மாறிமாறி உற்று நோக்கி, அரசனை விளித்து, 'இவ்விருவருள் இளைஞனான இளங்கோவே அரசனாதற்கு உரியவன்' என்று மொழிந்தனன். அவ்வுரை கேட்ட இளங்கோ, அவனைச் சினந்து, 'மூத்தவன் இருக்க இளையவன் அரசனாதல் முறையன்று' எனக் கூறி, அவ்வவைக்கண் இருந்தோர் அனைவரும் அறியத் துறவறம் ஏற்றுக் கோமனை நீத்துக் குணவாயிற் கோட்டத்து இருந்து தவவாழ்க்கை மேற்கொண்டு **இளங்கோ அடிகள்** எனப் பட்டார்.

நெடுஞ்சேரலாதனுக்குப் பின்னர்ச் செங்குட்டுவன் சேரநாட்டுப் பேரரசனாயினன். இவன் தன் தந்தையோடு உடனிறந்த தாயின் உருவத்தைச் சிலையில் அமைத்து வழிபட விழைந்தான்; அதன் பொருட்டுக் கல் கொண்டுவர இமயம் சென்றான் ; இடையில் எதிர்ப் பட்ட வேந்தரை வீரமொடு தாக்கி வாகை சூடினான்; இமயத்தினின்றும் இருங்கல் கொண்டு மீண்டு தன் நகரடைந்து அதில் தன் தாயின் உருவத்தைச் செதுக்கி வைத்து, அதனை வணங்கி வந்தான். என்னே இவன் தன் தாய் அன்பு !

செங்குட்டுவன் சேரர் மரபிற்குச் சிறப்பாக உரிய வீரத்தில் தன் முன்னோர் யாவரினும் விஞ்சி, அருஞ் செயல் பல புரிந்து வீறுபெற்று விளங்கினான். இவன் ஆக்கம் கண்ட சோழ பாண்டியர்கள் இவன் பால் அழுக்காறு கொண்டு, இவனைப் பொருது அடக்க எண்ணினர். அழுக்காற்றினால் அறிவிழந்த அவர்கள் பெரும்படையோடு சென்று **கொங்கர் செங்களம்** என்னும் இடத்தில் செங்குட்டுவனோடு கடும்

போர் தொடங்கினர். எலிப்பகை நாகத்தை என் செய்யும்! அப் போரில் செங்குட்டுவனே எளிதில் வெற்றிபெற்றான். பகைவர் சிறப் பிழந்து சிதறி ஓடினர். பின்னர் இவன், கடலை அரணாகக் கொண்டு அதனிடை இருந்து துன்பிழைத்துவந்த தெவ்வரை, கடலில் நாவாயைச் செலுத்தி ஆண்மையோடு பொருது அழித்து அழியாப் புகழ் பெற்றான்; தனக்கும் தன் நண்பனான மோரிய மன்னனுக்கும் பகைவனான **பழையன்** என்னும் குறுநில மன்னனை வெருவரப்பொருது வெற்றி மாலை சூடினான்; தன் மாமனாகிய சோழ மன்னன் இறந்தானாக, அவன் மகன் அரசு நிலை எய்தியதனை ஏற்றுக் கொள்ளாமல் இடர் விளைத்த சோழ மரபினர் ஒன்பதின்மரை **நேரிவாயில்** என்னும் இடத்தில் சேர எதிர்த்து ஒரு பகற்பொழுதில் வென்று, தன் மைத்துன னுக்கு மணிமுடி சூட்டி மகிழ்ந்தான். இங்ஙனம் இச் சேர மன்னன் செய்த பேரமர்கள் கணக்கிலவாகும். இவன் சென்ற போர் தோறும் வெற்றியே பெற்று விறல் மிகு வீரனாக விளங்கினான்.

இவன் காலத்தில் கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வ மாகிய கண்ணகி என்பாள், தன் காதற் கணவனாகிய கோவலனைக் கள்வனெனக்கூறிக் கொல்வித்த பாண்டியனைப் பழி வாங்கி, மதுரை மாநகரை மண்டெரியூட்டி, அந் நகரினின்றும் நீங்கி, எங்கும் நில்லாது நிலையாது நெடிது சென்று, சேர நாடு அடைந்து **திருச்செங் குன்றம்** என்னும் மலைமீதேறி, ஒரு வேங்கை மரத்தின் நிழலில் தங்கி, ஆண்டு இருந்தோர் காண, விண்ணினின்றும் இறங்கிய வண்ண விமானத்தில் தெய்வ வடிவில் தோன்றிய கோவலனோடு வானுலகு எய்தினள். தன் காதல் மனைவியாகிய **இளங்கோ வேண்மாளோ**டும், இளவலாகிய இளங்கோவடிகளோடும் மலைவளங் காணச் சென்ற செங்குட்டுவன் அவ் வியத்தகு செய்தியை அம்மலையில் வாழும் வேடு வர் கூறக்கேட்டு இறும்பூது எய்தி, தன் நாடு நோக்கி வந்த பத்தினிக் கடவுளை ஆலயம் எடுத்து வழிபடுதல் வேண்டும் எனத் தன் மனைவி கூற, அவ்வாறே அப்பத்தினியின் படிவம் சமைக்க ஏற்ற சிலையை இமயமலையினின்றும் கொண்டுவரத் துணிந்தான்.

செங்குட்டுவன் குறித்த வேளையில் நால்வகைப்படையும் சூழ்ந்து வர வடதிசை நோக்கிச் சென்றான்; அங்கு இவனது வலியும் வீரமும் அறியாது இவனை எதிர்த்த வடவரசருள் பலரைப் பொருது புறந்தரச் செய்தான்; சிலரைச் சிறுமையுறச் செய்தான். பின்னர் இவன்

இமயம் சென்று தக்க சிலையைத் தேர்ந்து எடுத்து, அதனைத்தான் சிறை செய்த பகையரசர் முடிமீது ஏற்றி வந்து கங்கையில் நீராட்டித் தூய்மை செய்வித்து, மீண்டு தன் நாட்டை அடைந்தான். அங்கு இவன் பெருங் கோயில் ஒன்று கட்டுவித்து. அதில் வீரபத்தினியின் படிமத்தை நிறுத்தி, அதற்கு முறைப்படி சிறப்புறப் பெருவிழாச் செய்வித்தான். அதனை ஏற்று மகிழ்ந்த அக்கற்புக் கடவுள் யாவரும் காண விண்ணில் தோன்றிக் காட்சி வழங்கி, இவனை வாழ்த்தி மறைந்தனள். அனை வரும் அப் பத்தினியின் பெருமையை வியந்து சேரனைப் புகழ்ந்தனர்.

சேரன் செங்குட்டுவன் வைதிக மதத்தினன்; சைவ சமயத் தைத் தழுவிச் சிவபெருமானை வழிபட்டு வந்தவன். எனினும், இவன் பிற மதங்கள் பலவற்றையும் ஒப்ப மதித்து ஓம்பி, வந்தனன். இவன் ஆட்சிக் காலத்தில் சேர நாட்டின்கண் சமரச சன்மார்க்க நெறி தழைத்து ஓங்கியது. பல்வேறு மதங்களைத் தழுவிய மக்களும் தம் முள் சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமைகொண்டு உயர்வாக வாழ்ந் தனர். இவன்பால் அடற்கரிய கடற்படையும் நிகரற்ற நால்வகை நிலப்படையும் நன்கு அமைந்திருந்தன. **ஐம்பெரும் குழுவினரும், எண்பேராயத்தின**ரும் அரசியலில் தலைமை பூண்டு ஆட்சியைத் திறமையாக நடத்தி வந்தனர். இவன் தனது மரபுக்கு உரிய வில்லோடு, முறையே சோழபாண்டியர்கட்கு உரிய இலச்சினைகளாகிய புலியையும் மீனையும் ஒருங்கு சேர்த்து அமைக்கப்பெற்ற அரசியல் முத்திரையை உடையவனாக இருந்தான். இதனால் இவன் அக்காலத்துத் தமிழரசர் மூவருள்ளும் தலைமை பெற்று விளங்கினன் என்பது தோன்றுகின்றது.

வரையாது வழங்கும் வண்மைசான்ற செங்குட்டுவன் தமிழ் மொழியின்பால் பற்றுமிக உடையனாய் அம்மொழியிற் புலமை சிறந்த புலவர் பலரைப் பரிவோடு ஆதரித்து வந்தான். அங்ஙனம் இவனால் ஆதரிக்கப்பெற்ற நல்லிசைப் புலவருள் சிறந்தோர் **பரண**ரும் **சாத்தனா**ரும் ஆவர். சாத்தனார் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய **மணிமேகலை**யை இயற்றித் தந்து இரும்புகழ் கொண்டவர். பரணர் **பதிற்றுபத்து** என்னும் பழைய சங்க நூலிற் செங்குட்டுவனது வீரச் செயல்களையும், வெற்றிப் பெருமையையும், வள்ளற்றன்மையையும் உள்ளவாறே உவந்து புகழ்ந்து பாடியுள்ளார்.

இங்ஙனம் அரசர் நடுங்கும் ஆண்மையும், புலவர் பாடும் புகழும் உடையோனாகிய சேர மன்னன் ஐம்பது ஆண்டுகள் கண்ணை இமை

கள் காப்பதுபோன்று குடிமக்களைக்காத்து வந்தான். இவன் ஆட்சியில் மக்கள் இன்பமே நுகர்ந்து இனிது வாழ்ந்தனர். தமிழ் மொழியும் தமிழ் நாடுமே தலைமை பெற்றுச் சிறந்து விளங்கின.

### அருஞ் சொற்கள்

*தனிக்கோல், இலச்சினை, விளித்து, கோநகர், கோட்டம், கற்புக்கடம், படிவம், தெவ்வர், ஐம்பெருங்குழு, எண்பேராயம்.*

### பயிற்சி

விடை கூறுக ;—

1. *சேர நாடு யாது? அதன் தலைநகரம் எது?*
2. *தமிழ்வேந்தர் மூவருள்ளும் சேரர்க்குள்ள தனிச் சிறப்பு யாது?*
3. *சேரர் சிறப்பியல்புகள் யாவை?*
4. *இளங்கோ துறவறம் மேற்கொண்டது ஏன்?*
5. *செங்குட்டுவன் தாய் அன்பு எவ்வாறு விளங்குகிறது?*
6. *தமிழ் நாட்டில் செங்குட்டுவன் செய்த போர்கள் எவை?*
7. *கொங்கர் செங்களப் போர், நேரிவாயிற் போர் இவற்றைப் பற்றிக் குறிப்பு எழுதுக.*
8. *கண்ணகி செய்தியைச் செங்குட்டுவன் அறிந்தது எவ்வாறு?*
9. *இருங்கோ வேண்மாள் பத்தினிக் கடவுளை எவ்வாறு சிறப்பிக்க வேண்டுமென்று கூறினாள்?*
10. *செங்குட்டுவன் பத்தினிப் படிமம் சமைக்கக் கல் கொண்டு வந்த செய்தியை எழுதுக.*
11. *செங்குட்டுவன் மதம், ஆட்சி—இவை பற்றிக் குறிப்பு எழுதுக.*
12. *செங்குட்டுவன் அக்காலத்துத் தமிழரசர் மூவருள்ளும் தலைமை பெற்று விளங்கினான் என்பது எவ்வாறு அறியப் படுகிறது?*

# 6. குடும்பக் கலை

**வித்துவான். து. கண்ணம்மாள்**

ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தக்க வயதடைந்தவுடன் குடும்பப் பொறுப்பு ஏற்று நடத்துவது இயல்பு. குடும்பம் நடத்துவது என்பது ஒரு கலை. ஓவியம், சிற்பம், நாட்டியம், இசை, கூத்து முதலியவை எங்ஙனம் கலைகள் எனக் கருதப் படுகின்றனவோ, அங்ஙனமே குடும்பம் நடத்திச் செல்வதும் ஒரு தனிக் கலையே யாகும்.

குடும்பத்தை வெற்றியுடன் நடத்திச் செல்பவர், வாழ்க்கையைக் கவலையற்று இன்பமாகக் கழிப்பர். குடும்பக்கலை யறியாமல், குடும்பத்தை நடத்துபவர், பல அல்லல்களுக்கு ஆளாகிச் "சம்சார சாகரம் துக்கம்" என்று கூறிக் கொண்டு, 'இக்குடும்பத் தொல்லை என்று நீங்குமோ' என்று காலமெல்லாம் துன்புற்று, வாழ்க்கையை வெறுத்து என்றும் முணுமுணுத்துக் கொண்டிருப்பர்.

"ஆன முதலில் அதிகம் செலவானால்,
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய், ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு"

என்று கூறப்பட்டிருக்கும் தமிழ்ச்செய்யுள், குடும்பத்தை நடத்தும் பொறுப்பு ஏற்றுக்கொள்பவனுக்கு முதற் பாடமாயிருக்கிறது. இஃதேபோன்று வள்ளுவப்பெரியார்,

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

என்று கூறியிருப்பதன் மூலம் மகளிர் தம் கணவருடைய வருவாய்க்குத் தக்கபடி செலவு செய்தல் வேண்டும் என்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

'வருவாய்க்கு ஏற்ற செலவு' என்னும் முதற்பாடமே, குடும்பக் கலையை வெற்றியடையச் செய்யும் முக்கிய பாடமாகும். இதனைக் கருத்திற் கொண்டே குடும்பத்தின் தேவைகளைக் கவனித்தல் வேண்டும். மனித வாழ்க்கைக்குத் தேவைப்படும் பொருள்களை இரு வகையாகப் பிரிக்கலாம், ஒன்று வாழ்க்கைக்கு இன்றியமையாமல் தேவைப்படுபவை. மற்றொன்று ஆடம்பரமானவை,

சத்து மிகுந்த எளிய உணவு, தூய எளிய உடை, சுகாதாரத்திற் கேற்ற தேவைக்குரிய அளவு வீடு, கல்வி, மருத்துவ வசதி முதலியவை முதலினத்தில் சேரத்தக்கவை.

ஆடம்பர உணவு, தேவைக்கு மேற்பட்ட அகன்ற இடமுடைய வீடு, பட்டாடைகள், பகட்டான உடைகள், அணிகலன்கள், விலை உயர்ந்த பாத்திரங்கள், பிற சாமான்கள், அடிக்கடி படக்காட்சி பார்த்தல், விருந்துகள் நடத்துதல், பிரயாணங்கள் செய்தல், வேலைக்காரர்களை வைத்துக் கொள்ளுதல் முதலியவை இரண்டாவதினத்தில் சேர்க்கத் தக்கவை.

தேவைக்கு மேற்பட்ட சாமான்களை வாங்கிச் சேர்க்கும் வேலை, தேவையற்ற செயல்களில் ஈடுபடுதல் முதலியவை நாகரிகத்தின் பெயரால் பல குடும்பங்களில் நடைபெறுகின்றன. இதனால் பொருட் செலவு மிகுந்து, இன்றியமையாத செலவுக்குப் பொருள் முட்டேற்படுகின்றது; குடும்ப வாழ்வு தொல்லையாக மாறுகிறது.

நம் நாட்டில் செல்வந்தர் மிகச் சிலர். ஏழைகளே பெரும்பாலோர். இவர்கள் போதிய வருமானம் அற்றிருக்கையில், எது வாழ்வுக்குத் தேவை, எது தேவையில்லை என்பதைப் பகுத்தறிந்து வாழ்க்கை நடத்துவாராயின் வாழ்க்கையில் உள்ள பல தொல்லைகள் அகன்று, வாழ்க்கைத் துன்பம் இன்பமாக மாறும்.

இறைச்சி, மீன், முட்டை, நெய், பால் முதலியவற்றை நிறைய உண்டு வந்தாலன்றி உடல் உரத்துடன் இருக்க முடியாதென்று சிலர் கருதுகின்றனர். இதன் பயனாக வருமானக் குறைவுள்ளோர், இவற்றை வாங்கியுண்பதற்காகத் தங்கள் வருவாய்க்கு மீறிய செலவு செய்கின்றனர்.

பட்டாடைகள் போன்ற பகட்டான உடைகளை உடுத்திச் செல்வதுதான் மதிப்புக்குரியது என்று கருதிச் சிலர், அவற்றை வாங்குவதில் பெரும் பொருள் செலவிட்டுக் கடன் படுகின்றனர்.

இவ்வண்ணமே, வீட்டை அமைத்தல், வீட்டுக்குரிய தட்டு முட்டுச் சாமான்களை வாங்குதல் முதலியவற்றிலும் சிலர் பெரும் பொருளைச் செலவழித்துக் கடன்பட்டு அல்லலுறுகின்றனர்.

உடலை உரமுடையதாக வைத்திருக்கக் கூடிய வன்மை காய்கறி கீரை பருப்பு முதலியவைகளுக்குமுண்டு என்பதை இவர்கள் உணர வேண்டும். எவ்வுடையாயினும் தூய உடைக்கே மதிப்புண்டு என் பதையும், சிறு குடிலாயினும் துப்புரவாக இருத்தலே சிறந்தது என் பதையும் நினைவிற் கொள்ளவேண்டும். பணத்தைச் செட்டாகவும், செம்மையாகவும், பலனுடையதாகவும் செலவிடவேண்டும். இவ் வண்ண மொழுகின் வாழ்க்கை வளமுடையதாகும்.

எனவே, குடும்பப் பொறுப்பேற்கு முன் **வருவாய்க்குத் தக்க செலவு** செய்வது என்று முதலில் திட்டப்படுத்திக் கொள்ளவேண்டும். அவ்வண்ணம் செலவுத் திட்டம் வகுக்கையில், உணவுக்கு, முதலிட மும், உடைகளுக்கும் உறைவிடத்திற்கும் இரண்டாவ திடமும் கொடுத் துச் செலவைத் திட்டம் செய்துகொள்ளுதல் வேண்டும். இதனை ஒழுங்காக முடிக்கக் குடும்பப் பொறுப்பேற்பவர் தத்தம் வீட்டிற்குரிய வரவு செலவுத் திட்டத்தை ஆயத்தம் செய்துகொள்ளுதல் வேண்டும். பெரும்பாலான குடும்பத்தவர்களுக்கு மாத வருவாயே கிடைக்கிறபடி யால், ஒரு மாதத்திற்குரிய வரவு செலவுத் திட்டத்தை வகுத்துக்கொள் வது நலம்.

இதனை எவ்வாறு வகுப்பது? மாத வருமானத்தையும் வீட்டில் உள்ளவர்களின் எண்ணிக்கையையும் கணக்கில் வைத்துக் கொள்ள வேண்டும். உண்ண உள்ளோர் தொகை அதிகமாயும் வருமானம் குறைவாயுமிருந்தால், முதலில் உணவுக்காக வருவாயில் பெரும் பங்கை ஒதுக்கிவிட வேண்டும். உணவையும் கூடிய வரையில் காய் கறி உணவாக ஆக்கிக் கொள்ள வேண்டும், திரைப்படக் காட்சி, பிரயாணம், விருந்துசெய்தல் முதலியவற்றை அடியோடு நீக்குதல் வேண்டும். ஒரு சிறு பகுதியை உடைக்கென மிச்சம் பிடித்தல் வேண்டும். வீட்டு வாடகை, கல்வி போன்றவற்றை முதலில் கவ னித்தல் வேண்டும். எஞ்சிய தேவைகளை வருமானம் உயர்கையில் பார்த்துக் கொள்ளலாம் என விடுத்தல் வேண்டும்.

ஒவ்வொரு நாளும் செலவிடும் பணத்தைத் தவறாமல் குறித்து வைத்துக் கொள்ளவேண்டும். வீட்டில் அன்றாடம் நடைபெறும் செலவின் கணக்கு வைத்திராத குடும்பம் சீர்குலையுமாகையால், கணக்கு ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்க வேண்டும். நாள்தோறும் படுக் கைக்குப் போகுமுன் அன்று ஏற்பட்ட செலவை எழுதிக் கையிருப்புத்

தொகையை மீதி இருப்பாகக் கட்ட வேண்டும். மாத முடிவில் செலவு செய்த தொகைகளைக் கூட்டி, வருவாயுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், நம் செலவு வருவாய்க்குள் அடங்குகிறதா ? கடன்வாங்கிச் செலவு செய்ய நேரிட்டுள்ளதா ? கடன் வாங்கிச் செலவு செய்யவேண்டிய தேவை என்ன ஏற்பட்டது ? கடன் வாங்காமல் அதைச் சரிப்படுத்தியிருக்க முடியாதா ? என்பன போன்ற யோசனைகளுக்கு இடமேற்பட்டு, அடுத்த மாதச் செலவுத் திட்டத்தைக் கருத்தோடு செய்ய இடமளிக்கும். 'ஆற்றில் கொட்டினாலும் அளந்து கொட்டு' என்னும் பழமொழியை எண்ணிக் குடும்பக் கணக்கு வைக்கும் பழக்கத்தை ஒவ்வொருவரும் மேற்கொள்ளுதல் வேண்டும்.

குடும்பச் செலவு வருமானத்திற்கு மேல் போகாமலிருக்க வேண்டுமானால், எப்பொருளையும் இன்றியமையாது தேவையானது தானா என்று கவனித்துக் கையிற் காசு கொடுத்து வாங்கும் வழக்கத்தை மேற்கொள்ளுதல் வேண்டும். இதனால், அப்போது மாறுதலுக்குள்ளாகும் விலைகளின் விவரம் தெரிந்து, விலைக் கேற்ப, சில பொருள்களைக் குறைத்தும் கூட்டியும் வாங்கிக் கொள்ளலாம், விலை மலிவாக உள்ள காலங்களில், பருப்பு வகைகள், புளி, விறகு, பயறு வகைகள், மிளகாய், மிளகு, கடுகு போன்ற பொருள்களை மிகுந்த அளவில் வாங்கி வைத்துக் கொள்ளலாம்,

கையிற் காசு கொடுத்து வாங்காமல் கடன் வாங்கும் வழக்கத்தை மேற்கொண்டால், நாளடைவில் குடும்பம், கடனுக்குள்ளாகி அல்லலுறும் என்பதில் ஐயமில்லை.

குடும்பப் பொறுப்பேற்போர் வீட்டினுள் வேண்டாத சாமான்களைப் போட்டு நிரப்பி இடத்தை அடைத்து விடுதல் கூடாது; அசுத்தங்களும், மூலைகளில் குப்பை கூளங்களும், உத்தரத்தில் ஒட்டடை பூச்சி புழுக்கள் முதலியவைகளும் சேராவண்ணம், அடிக்கடி கவனித்துத் துப்புரவாக வைத்துக் கொள்ளுதல் வேண்டும். ஈ, கரப்பான், வண்டு, எலி முதலியவை சேருவதற்கிடமில்லாமல் மூலை முடுக்குகளில் சாமான் அடைப்பின்றி வைத்திருத்தல் வேண்டும், கழிநீர்ப் பாதை எப்போதும் தூய்மையாக இருத்தல் வேண்டும். வீட்டுப் பாத்திரங்கள், துணிகள் முதலியவற்றை அன்றாடம் துப்புரவு செய்து அவற்றிற்குரிய இடங்களில் வைத்திருத்தல் வேண்டும். பிள்ளைகள் புழுதியிற் புரளாதவாறு கவனித்துக் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறெல்லாம் சுகாதார விதிகளைக், கைக்கொண்டு நடந்தால், நோயினின்று குடும்பத்தைக் காப்பாற்றி விடலாம். இதனால் மருந்துச் செலவு ஏற்படாமலிருக்கும்.

இங்ஙனம், உணவு, உடை, உறைவிடம் முதலியவற்றில் துப்புரவாக இருக்குமாறு கவனித்து, இன்றியமையாது தேவைப்படுபவைகளை மட்டும் வாங்கி, வருவாய்க் கேற்பச் செலவிட்டு, வீட்டுக்கணக்கு வைத்து, செட்டாக நடத்தப்படும் குடும்பம் நாளடைவில் நன்னிலை எய்துதல் இயலும். இவ்வாறு குடும்பத்தை நன்னிலையில் நடத்தும் வாழ்க்கையே இன்ப வாழ்க்கையாகும்.

"இயல்பினுன் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாந் தலை"

என்னும் திருவள்ளுவர் திருவாக்கு மனத்திற் பதிக்கத் தக்கதாகும்.

I. பொருள் கூறுக :--

*ஓவியம், சிற்பம், அல்லல், சாகரம், வளம், தன்கொண்டான், வாழ்க்கைத்துணை, உரம், துப்புரவு.*

**பயிற்சி**

II. விடை கூறுக:—

1. *கலைகள் எனக் கருதப்படுவன எவை ?*
2. *வருவாய்க்கு மேல் செலவு செய்தால் வரும் தீமைகள் யாவை ?*
3. *இல்வாழ்க்கையில் கடன் ஏற்படாதிருக்க யாது செய்தல் வேண்டும் ?*
5. *ஆடம்பர வாழ்க்கை என்று எதனைக் கூறுதல் வேண்டும்?*
4. *நாள் தோறும் வீட்டுச் செலவுக் கணக்கை ஏன் எழுத வேண்டும் ?*
6. *குடும்ப வாழ்க்கையில் இருப்பவர் கடன்காரராவதற்குக் காரணம் என்ன ?*
7. *வீட்டை எவ்வாறு ஒழுங்குபடுத்தி வைத்துக் கொள்ளுதல் வேண்டும் ?*

III. வாக்கியங்களில் அமைத்து எழுதுக:—

*குடும்பப் பொறுப்பு, கவலையற்று, தேவைக்குரிய, துப்புரவு, நாளடைவில்.*

# 7. செஞ்சிக்கோட்டை

T. S. உமாபதி M.A.,L.T. Dip. in Geog.

**அமைப்பு :**

**செஞ்சிக்கோட்டை** தமிழகத்திற் காணப்படும் பண்டைக் கோட்டைகளுள் ஒன்று. இது தென்னார்க்காட்டு ஜில்லாவில் **செஞ்சி யாறு** என வழங்கும் **வராக** நதியின் மேற்குக் கரையில் இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. இதன் அமைப்பு வியக்கத்தக்கது.

இக் கோட்டை முக்கோணமாக அமைந்துள்ள மூன்று குன்றுகளை வன்மை மிக்க கருங்கற் சுவர்களால் இணைத்துக் கட்டப்பட்டுள்ளது. இச் சுவர்கள் 60 அடி அகலமும், 20 முதல் 25 அடிவரை உயரமும் உள்ளவை. இவற்றின் புறத்தே 80 அடி அகலம் உள்ள அகழி இருக்கின்றது. இச் சுவர்களும் குன்றுகளும் இவற்றின் இடையில் சுமார் மூன்றுமைல் சுற்றளவுள்ள நிலப்பரப்பும் **கீழ்க்கோட்டை** எனப் படும். இதற்கு வடக்கில் ஒன்றும் கிழக்கில் ஒன்றுமாக இரண்டு வாயில்கள் இருக்கின்றன. வடக்கே உள்ளதற்கு **ஆர்க்காட்டு வாயில்** என்பது பெயர். கிழக்கில் உள்ளதற்குப் **புதுச்சேரி வாயில்** என்பது பெயர்.

மேற்குறித்த மூன்று குன்றுகளுள் ஒவ்வொன்றும் பலமான சுவர் களால் தனித்தனி அரண் செய்யப் பெற்றுள்ளது. இவற்றுள் வடக்கே இருப்பதற்குக் **கிருஷ்ணகிரி** என்பது பெயர். அதன் உச்சியை அடையக் கீழ்க்கோட்டையிலிருந்து படிகள் அமைக்கப்பெற்றுள்ளன தெற்கே இருக்கும் குன்றுக்குச் **சந்திராயன் துர்க்கம்** என்பது பெயர், மேற்கே உள்ளதற்கு **இராசகிரி** என்பது பெயர். இதுவே மூன்று குன்றுகளிலும் உயர்ந்ததும் முக்கியமானதும் ஆகும். இது கடல் மட்டத்திற்குமேல் 968 அடியும், அடித்தலத்திலிருந்து 800 அடியும் உயரமுள்ளது.

மேற்குறித்த முக்கோண வடிவமான கீழ்க்கோட்டையினுள்ளே இராசகிரியின் அடிவாரத்தையொட்டி அரைவட்ட வடிவமாகச் சுமார் முக்கால் மைல் சுற்றளவுள்ள மற்றொரு கோட்டை அமைந்துள்ளது. இதுவும் வன்மை மிக்க மதிற்சுவர்களாலும், ஆழ்ந்தகன்ற அகழிகளா

லும் அரண் செய்யப்பட்டுள்ளது. இது கீழ்க்கோட்டையின் உள்ளே அமைந்திருப்பதால் **உட்கோட்டை** என வழங்குகின்றது. இராசகிரிக் கோட்டைவாயிலை இந்த உட்கோட்டையின் மூலமாகத்தான் அடையக் கூடும்.

இராசகிரியின் அமைப்பு மற்றெல்லாவற்றினும் சிறந்தது. இதன் வாயில் உட்கோட்டையின் கிழக்கு நோக்கி இருக்கிறது. அங்கிருந்து ஒன்றன் பின் ஒன்றாக அமைக்கப்பட்டுள்ள சுவர்களினூடே மேலே செல்வதற்குப் படிகள் இருக்கின்றன. இப்படிகளின் வழியாக 400 அடி உயரம் சென்றால், அங்கு இராசகிரியின் தென் பாகத்தின் பிதுக்கமாகிய சமநிலத்தை அடையலாம், புளியமரங்களும், புற்றரையுமுள்ள இச் சமநிலம் சுமார் 100 கஜ நீளமும், 30 அல்லது 40 கஜ அகலமும் இருக்கும். இங்கிருந்து இராசகிரி மிகவும் செங்குத்தாய் இருப்பதால், அதன்மீது ஏறுவது எளிதன்று. தென்மேற்குப் பக்கமாக உள்ள மிகக் குறுகிய சரிவின் மூலமாகத்தான் ஏறவேண்டும். இச்சரிவும் சிறிது செங்குத்தாகவே இருக்கிறது. அன்றியும், இதன் குறுக்கே ஒவ்வொன்றும் சுமார் 25 அடி உயரமுள்ள பலமான சுவர்கள் ஒன்றன்பின் ஒன்றாகக் கட்டப்பட்டு, ஒவ்வொன்றிலும் ஒரு வாயில் அமைக்கப்பட்டுள்ளது. இவ் வாயில்களின் மூலம் செல்லும் இவ்வழி இராசகிரியின் உன்னத பாகத்திற்குச் சம உயரத்தில் உள்ள ஒரு பாறையின்மீது முடிவடைகிறது. இப்பாறைக்கும் இராசகிரியின் உச்சிக்கும் இடையில் 24 அடி அகலம் உள்ள பிளவு இருக்கிறது. இந்த இடைவெளியைக் கடக்கக் குறுகிய ஒரு மரப்பாலம் அமைக்கப்பட்டுள்ளது. அப் பாலத்தைக் கடந்தால், இராசகிரியின் உச்சியில் உள்ள கோட்டையின் வாயிலை அடையலாம். இவ்வாயிலையும் கடந்தால், ஏறத்தாழச் சமமாக உள்ள இராசகிரியின் சிகரத்தை அடையக்கூடும்.

**இக்காலத்தில் காணப்படுஞ் சின்னங்கள் :**

கிருஷ்ணகிரிக் கோட்டையின் உச்சியில் கருங்கற்களால் கட்டப்பட்ட இரண்டு தானியக்களஞ்சியங்களும், ஒரு மண்டபமும், விக்கிரகம் இல்லாத அரங்கநாதர் ஆலயமும், செங்கற்களாலான ஒரு கொலு மண்டபமும் இருக்கின்றன. இவையெல்லாம் சிதைவுற்றுப் பாழ்நிலையில் உள்ளன. ஆயினும், கொலுமண்டபம் கண்டு களிக்கத்தக்கது. கிருஷ்ணகிரியின்மீது ஒரு சுனை இருக்கிறது, அதன் தண்ணீர் பருகுதற்கு எளிதாயிருக்கிறது.

சந்திராயன் துர்க்கத்தின்மீது ஒரு மண்டபம் மட்டுமே இருக்கிறது. அதன் அமைப்பைக் கீழிருந்தே காணக்கூடும்.

இராசகிரியின் உச்சியில் இக்கோட்டையின் பெருமையை விளக்கக்கூடிய சின்னங்கள் பல இருக்கின்றன. இங்கும் விக்கிரகமில்லாத அரங்கநாதர் ஆலயம் ஒன்றுண்டு. அது நல்ல வேலைப்பாடு உடையது. இரண்டு பெரிய தானியக் களஞ்சியங்களும், ஒரு மருந்துக்கிடங்கும், நிலவறை அமைக்கப்பட்ட நிதிச்சாலை ஒன்றும், இக்காலத்தில் மணிக்கூண்டு என வழங்கும் — அக்காலத்திற் கொடித்தம்பம் அமைந்திருந்த —ஒரு கட்டடமும் இராசகிரியின் பண்டைப் பெருமையை விளக்குகின்றன. இவையன்றி, இக்கோட்டையின் தென்பகுதியில் சிறிது தாழ்ந்த சமநிலப்பகுதியில் ஒரு சிறிய மண்டபத்தில் பதினேரடி நீளமும் ஏழடி சுற்றளவுமுள்ள வாய் கொண்ட ஒரு பீரங்கி வைக்கப்பட்டுள்ளது. இராசகிரியின்மீது பாறைகளின் இடையில் இரண்டு நீர்ச்சுனைகள் இருக்கின்றன. இவற்றில் எக்காலத்திலும் நீர் வற்றுவதில்லையெனக் கூறப்படுகின்றது.

இராசகிரிக்குச் செல்லும் வழியில் உள்ள பீடபூமிப் பகுதியில் புளியமரங்களும், அடர்ந்த புதர்களும் இருக்கின்றன என்றேம். இங்கு இரண்டு சிறு கோவில்களுண்டு. அவற்றுள் ஒன்று விக்கிரகமில்லாத அரங்கநாதர் கோவில். மற்றென்றில் மட்டும் விக்கிரகம் இருக்கின்றது. அது **கமலக்கண்ணி கோவில்** எனப்படும். முற்காலத்திலும் இக்காலத்திலும் கிராமதேவதை கோவிலாய் இருந்ததும், இருப்பதும் அதுவே. அக்கோவிலின் எதிரில் பாழ்நிலையில் உள்ள ஒரு திருக்குளமும், அதற்கு மேற்கே அதே நிலையிலுள்ளதொரு மண்டபமும் இருக்கின்றன. அக்கோவிலும், குளமும், மலையும், மரங்களும், பாழடைந்த மண்டபங்களும், இரண்டு பாறைகளின் இடையிலுள்ள நீர்ச்சுனையும் அந்த இடத்திற் செல்வார்க்கு அச்சத்தை யூட்டுகின்றன.

இராசகிரியின் அடிவாரத்தில் அமைந்துள்ள உட்கோட்டையிலும் பல சின்னங்கள் உள. செஞ்சிக்கோட்டையின் பல பகுதிகளிலும் உள்ள தானியக் களஞ்சியங்களுள் மிகப் பெரியது அங்குத் தானிருக்கிறது. அது மூன்று அறைகளை உடையது. ஒவ்வோர் அறையும் 81 அடி நீளமும், 28 அடி அகலமும், 39 அடி உயரமும் உடையது. அக் களஞ்சியத்தின் சுவர்கள் 5½ அடி கனம் உள்ளவை.

அக் களஞ்சியத்தின் அருகில் அதைவிடப் பெரியதொரு சிலம்ப மண்டபம் இருக்கிறது. அவற்றிற்குக் கிழக்கே அரசரும் அரசியரும் குளிக்கும் மண்டபங்கள் இருந்தன வென்று தெரிகிறது. ஆனால், இப்போது அவற்றின் அடித்தலங்களாக இருந்த பாறைகள் மட்டும் உள்ளன. ஒவ்வொன்றும் ஒரே பாறையிற் செதுக்கப்பட்டதும் மிகப் பெரியதும் வழுவழுப்பானதுமான அவ்விரண்டு பாறைகளும் மிகவும் நேர்த்தியாய் விளங்குகின்றன. அவற்றிற்கு வடக்கே போர்விரர் விடுதிகளின் சின்னங்கள் காணப்படுகின்றன. அவ் விடுதிகளுக்குக் கிழக்கில் 80 அடி உயரமும், எட்டு அடுக்குக்களும் கொண்ட **கலியாண மகால்** என்னும் நாற்கோண வடிவமுள்ள கட்டடம் இருக்கிறது. அதைச் சுற்றிலும் சிறிது இடைவெளி விட்டு நாற்புறங்களிலும் விசாலமான அறைகளை உடைய கட்டடங்கள் இருக்கின்றன. அவையே அரசியரும், அவர் தோழியரும் வசித்த விடுதிகள் எனப்படுகின்றன. அவற்றிற்கு உட்கோட்டையின் தென்பாகத்தில் உள்ள சக்கரக்குளத்திலிருந்து தண்ணீர் வ்ருவதற்கு மட்குழாய்கள் அமைக்கப்பெற்றுள்ளன. சக்கரக்குளத்திற்கும், அதை யடுத்த செட்டிகுளத்திற்கும், இடையில் உள்ள பெரிய அநுமார் விக்கிரகம் காணத் தகுந்தது. செட்டிகுளத்தின் வடகரையிற் காணப்படும் ஒரு மேடைதான் தேஜ் சிங்கின் உடல் கொளுத்தப்பட்ட இடமென்று கூறப்படுகின்றது.

உட்கோட்டையின் வாயிலுக்கும் புதுச்சேரி வாயிலுக்கும் இடைப்பட்ட கீழ்க்கோட்டைப்பகுதியின் தென்பாரிசத்தில், சந்திராயன் துர்க்கத்தின் அருகில், விக்கிரகமில்லாத மிகப் பெரிய கோவில் ஒன்று இருக்கிறது. அது **வேங்கடரமண சுவாமி கோவில்** எனப்படும். அது இப்போது, பாழடைந்த நிலையில் இருக்கிறது. அக் கோவிலிலிருந்துதான் புதுச்சேரியில் கடற்கரையோரத்தில் உள்ள டூப்ளே சிலையின்முன் நாட்டப்பட்டுள்ள ஒற்றைக்கால் ஸ்தம்பங்கள் கொண்டு செல்லப்பட்டன. அவை மிக்க வேலைப்பாடு உடையவை. கீழ்க்கோட்டைக்கு வெளியில் தெற்கே ஒருமைல் தூரத்தில் பாழடைந்து கிடக்கும் **பட்டாபிராமசுவாமி** கோவிலும் வேங்கடரமணசுவாமி கோவிலைப் போன்ற வேலைப்பாடுகள் உடையதே.

இவற்றைத் தவிரக் கீழ்க்கோட்டையின் பெரும்பகுதி இப்போது விளைநிலமாக இருக்கிறது. அந்நிலங்களுக்குக் கோட்டை அகழிகளிலிருந்தும் செட்டிகுளத்திலிருந்தும் நீர் பாய்ச்சப்படுகிறது.

செஞ்சிக்கோட்டையைப்பற்றிக் கி. பி. 15-ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்ட வரலாறு எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் இங்கிலாந்தில் உள்ள இந்தியக் காரியாலயத்திலிருக்கும் **மெக்கென்ஸீ துரை** இந்தியாவைப்பற்றிச் சேகரித்து வைத்த **வரலாற்றுக் குறிப்புக்**களில் இதன் தோற்றம் முதலிய பண்டைய வரலாறுகள் கிடைக்கும் என்று கருதப்படுகிறது.

**கோட்டையின் சரித்திரம்** :

கி. பி. 16-ஆம் நூற்றுண்டில் விஜயநகர மன்னர்கள் தமிழகத்தில் தங்கள் அதிகாரத்தைப் பரப்பிய காலத்தில் செஞ்சிக்கோட்டை அவர்களுடைய பிரதிநிதிகளின் ஆட்சியில் இருந்தது. தலைக்கோட்டைச் சண்டைக்கும் பிறகு விஜயநகர ஆட்சி வீழ்ந்தபோது, இதை முதலில் கோல்கொண்டாச் சுல்தானும், பிறகு பீஜப்பூர் சுல்தானும் கைப்பற்றினார்கள்.

சிறிது காலத்தில் இக்கோட்டை மராட்டிய மன்னரான சிவாஜியின் ஆட்சிக்குட்பட்டது. அவரே இக்கோட்டையை மிக்க பலம் பொருந்தியதாக்கினர் எனப்படுகிறது. அவருக்குப் பிறகு அவுரங்கசீபு மன்னரிடம் தோல்வியுற்ற மராட்டிய மன்னரான இராமராஜா இக்கோட்டையை ஆண்டுவந்தார். ஆயினும் கி. பி. 1698-இல் அவுரங்கசீபு அனுப்பிய சேனைத்தலைவர் செஞ்சியை மராட்டிய மன்னரிடமிருந்து கைப்பற்றினரெனினும், அவர் அங்கு வசிக்காமல், ஆர்க்காட்டில் தங்கியிருக்க விரும்பினர். ஆதலால், அவர் செஞ்சியில் **சாரூப் சிங்கு** என்ற இராசபுத்திரரைத் தம் பிரதிநிதியாய் இருந்து ஆட்சிபுரிய அனுமதித்தார். தென்னாடு புகழும் தேஜ் சிங்கு இச் சாரூப் சிங் புதல்வரே.

தேஜ் சிங்கு ஆர்க்காட்டு நவாபான சாதுல்லாகானுக்குக் கப்பம் கட்ட மறுத்து, அவருடன் போர்புரிந்து உயிரிழந்த வரலாறே இக்காலத்தில் ‘ தேசிங்கு ராஜன் கதை ’ என வழங்குவது.

கி. பி. 1750-இல் பிரெஞ்சியர் செஞ்சிக்கோட்டையை முஸ்லிம்களிடமிருந்து கைப்பற்றினர். முப்பதாண்டுகள் கழித்து இதைப் பிரெஞ்சியரிடமிருந்து ஆங்கிலேயர் கைப்பற்றினர். பின்னர், மைசூரை ஆண்ட ஹைதர் அலி செஞ்சியைக் கைப்பற்றினர். ஆனல், இது மீண்டும் ஆங்கிலேயரால் பிடிக்கப்பட்டு, அதுமுதல் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தில் இருந்துவந்தது. இது இன்று இந்தியப் பண்டைச் சின்னங்களின் பாதுகாப்பு இலாக்காவின் கண்காணிப்பில் இருக்கிறது.

**முடிவுரை :**

சீரழிந்த நிலையில் உள்ள செஞ்சிக்கோட்டையைக் காணும் எவரும் பாரதநாட்டின் பண்டைப் பெருமையை உணராமலிருக்க முடியாது. கோட்டைகளின் அமைப்பைப்பற்றிப் பண்டைத் தமிழ்நூல்களில் படிக்கும்போது அதை அகக்கண்ணால் ஒருவாறு காண்கிறோம். ஆனால், செஞ்சிக்கோட்டையை நேரிற் காணும்போது, அகக்கண்ணாற் கண்ட பொருள் நம் புறக்கண்முன் தோற்றமளிப்பதை அறிகிறோம். இக் கோட்டை இன்றும் நம் பண்டைப்பெருமையை ஒருவாறு விளக்கிக் கொண்டு நிற்கின்றது.

I. பொருள் கூறுக :—

*அரண், பிதுக்கம், மணிக்கூண்டு.*

II. வாக்கியங்களில் அமைத்தெழுதுக:—

*ஏறத்தாழ, விளை நிலம், பண்டைப் பெருமை.*

III. விடை எழுதுக :—

1. *செஞ்சிக் கோட்டை எங்கு உளது ?*
2. *கீழ்க்கோட்டை எனப்படுவது எது ?*
3. *செஞ்சிக் கோட்டையில் அடங்கிய மூன்று குன்றுகள் எவை ?*
4. *உட்கோட்டை எனப்படுவது எது ?*
5. *இராசகிரியின் அமைப்பைப் பற்றிக் கூறுக.*
6. *இராசகிரியின் உச்சியில் காணப்படும் சின்னங்கள் எவை?*
7. *கமலக் கண்ணி கோயில் எங்குள்ளது ?*
8. *தேஜ்சிங்கின் உடல் எங்குக் கொளுத்தப்பட்டது ?*
9. *நேப்ளே சிலையின் முன் நாட்டப்பட்டுள்ள ஒற்றைக்கால் ஸ்தம்பங்கள் எங்கிருந்து வந்தவை ?*
10. *செஞ்சிக் கோட்டையின் சரித்திரத்தைப் பற்றி ஒரு சிறு குறிப்பு வரைக.*

# 8. நம்பிக்கை சோதிக்கப்படல்

## மகாத்மா காந்தியின் சுய சரிதம்

### ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள்

கோட்டையில் காரியாலய அறைகளும், கர்க்காமில் வீடும் அமர்த்திக்கொண்டேனாயினும், நான் அமைதியான வாழ்க்கை தொடங்க ஆண்டவன் சம்மதமில்லை. புதிய வீட்டிற்கு வந்து சில தினங்களாவதற்குள் எனது இரண்டாவது புதல்வன் மணிலாலுக்குக் கடுமையான அஸ்திசுரம் (டைபாய்டு) கண்டது. அவன் ஏற்கெனவே சில ஆண்டுகளுக்கு முன்பு கடும் வைசூரியால் துன்புற்றவன். அஸ்தி சுரத்துடன் கபவாத சுரம் (நிமோனியா) கலந்திருந்தது. சுர வேகத்தில் இரவு நேரங்களில் பிதற்றல் முதலிய குறிகளும் இருந்தன.

டாக்டரை யழைத்து வந்தேன். மருந்து அதிகப்பயன் தராதென்றும், கோழிமுட்டையும், கோழிக்குஞ்சு மாமிச ரசமும் உணவாகக் கொடுத்து வந்தால் நலமென்றும் அவர் சொன்னார்.

மணிலாலுக்கு அப்போது பத்து வயது. எனவே அவனுடைய விருப்பத்தைக் கேட்டு எதுவும் செய்வதிற்கில்லை. அவனுக்காக நானே முடிவு செய்தாக வேண்டும். டாக்டர் பார்சி வகுப்பைச் சேர்ந்தவர்; மிகவும் நல்லவர். நாங்கள் சாகபட்சிணிகளாதலின், அவர் கூறிய இரண்டில் எதையும் என் புதல்வனுக்குத் தர முடியாதென்றும், வேறு கொடுக்கக் கூடியது ஏதேனும் சொல்லக்கூடுமா என்றும் கேட்டேன்.

"தங்கள் புதல்வனின் உயிருக்கே அபாயம் ஏற்படக்கூடிய நிலைமை. பாலும் நீரும் கலந்து கொடுக்கலாமாயினும் அது அவ்வளவு போஷணை தராது. தங்களுக்குத்தான் தெரியுமே. எத்தனையோ ஹிந்து குடும்பங்களில் என்னைக் கூப்பிடுகிறார்கள். நான் கூறுவதெதையும் கொடுப்பதற்கு ஆட்சேபிப்பதில்லை. தாங்களும் தங்கள் புதல்வன் விஷயத்தில் அவ்வளவு கடின சித்தங் காட்டாமலிருத்தல் நலம்;" என்று டாக்டர் கூறினார்.

அப்போது நான் உரைத்ததாவது:—"தாங்கள் கூறுவது முற்றும் சரியே. டாக்டராகிய தாங்கள் தங்கள் நிலையிலிருந்து வேறெதுவும் சொல்ல முடியாது. ஆனால் என்னுடைய பொறுப்பு மிகவும் அதிகம்.

பையன் வயது வந்தவனுயிருந்தால் நிச்சயமாக அவனுடைய அபிப் பிராயத்தைக் கேட்டு அதற்கிணங்க நடக்க முயன்றிருப்பேன்; இப் போது அவனுக்காக நானே சிந்தித்து முடிவுசெய்ய வேண்டியவனு யிருக்கிறேன். இத்தகைய சந்தர்ப்பங்களிலேயே ஒருவனுடைய நம் பிக்கை சோதிக்கப்படுகிறது என்பது என் கருத்து. மாமிசம் முட்டை முதலியவற்றை மனிதன் தின்னலாகாதென்பது என்னுடைய சமயக் கொள்கையில் ஒரு பகுதியாகும். இக் கொள்கை சரியாகவோ, தவ ருகவோ இருக்கலாம். அதைப்பற்றிக் கவலையில்லை. உயிர் வாழ் வதற்காக நாம் கைக்கொள்ளும் சாதனங்களுக்கும் ஓர் எல்லை யிருக்க வேண்டும் என்பது என் நம்பிக்கை. உயிர் வைத்திருப்பதற்காகவும் நாம் சில காரியங்களைச் செய்யக்கூடாது. இத்தகைய சமயங்களில் கூட எனக்கோ, என்னைச் சேர்ந்தவர்களுக்கோ மாமிசம் அல்லது முட்டை உபயோகிப்பதை என் மதம் அநுமதிக்கவில்லை. எனவே தாங்கள் கூறுவதுண்மையே ஆகக்கூடுமாயினும் அவ்வபாயத்துக்குத் துணிந்தே காரியஞ்செய்தாக வேண்டும். ஆனல் தங்களை ஒன்று மன்ருடிக் கேட்டுக்கொள்கின்றேன். தங்களுடைய சிகிச்சையை ஏற் றுக்கொள்ள முடியாதபடியால் எனக்குத் தெரிந்துள்ள ஜல சிகிச்சை முறைகளைக் கையாண்டு பார்க்கப் போகிறேன். ஆனல் நாடி பார்க்க வும், ஹிருதயம் நுரையீரல் முதலியவற்றைப் பரிசோதிக்கவும் எனக் குத்தெரியா. அவ்வப்போது தாங்கள் வந்து, பரிசோதித்துக் குழந்தை யினுடைய நிலைமையை எனக்கறிவித்துச் சென்ருல் மிகவும் நன்றி யுள்ளவனுயிருப்பேன்,'

உத்தமரான அந்த டாக்டர் எனது கஷ்டங்களை யுணர்ந்ததுடன் என் வேண்டுகோளுக்கும் இசைந்தார். மணிலாலுக்கு இது சம்பந்த மான முடிவு செய்யும் பிராயம் வரவில்லையாயினும் எனக்கும் டாக்டருக் கும் நடந்த சம்பாஷணையின் விவரத்தை அவனிடம் கூறி அவன் அபிப்பிராயத்தைக் கேட்டேன்.

"தங்களுடைய ஜல சிகிச்சையே செய்யுங்கள். எனக்கு முட் டையும் மாமிசமும் வேண்டாம்" என்று மணிலால் கூறினன்.

நான் முட்டை அல்லது இறைச்சி ரசம் கொடுத்திருந்தால் அவன் அருந்தியிருப்பான் என்று எனக்குத் தெரிந்தே யிருந்ததாயினும், அவ னுடைய பதில் எனக்கு மகிழ்ச்சி தந்தது.

கூன் என்பவரின் சிகிச்சை முறையை நான் அறிந்திருந்தேன். அதைக் கையாண்டு சிறிது அநுபவமும் பெற்றிருந்தேன். உப வாசத்தினுல் பயன் விளையும் என்பதும் எனக்குத் தெரியும். எனவே கூன் முறைப்படி மணிலாலுக்கு ஆசன ஸ்நானங்கள் (hip baths) செய்வித்தேன் தொட்டியில் மூன்று நிமிஷத்துக்குமேல் வைத்திராமல் ஜாக்கிரதையா யிருந்தேன். மூன்று தினங்களுக்கு ஆரஞ்சுப்பழ ரசமும் தண்ணீரும் கலந்து அதையே உணவாகக் கொடுத்துவந்தேன்.

ஆனுல் உஷ்ணம் குறையவேயில்லை. சில சமயம் 104 டிகிரி வரையில் ஏறிற்று. இரவில் பிதற்ற லதிகமாயிருந்தது. நான் கவலை கொள்ளலானேன். ஊர் ஜனங்கள் என்ன சொல்வார்கள்? என் தமையனுர் என்னைப்பற்றி என்ன நினைப்பார்? வேறொரு டாக்டரைக் கூப்பிட்டாலென்ன? இல்லாவிடில் ஆயுர்வேத வைத்தியரை அழைக்கலாமா? என் செய்வது? பெற்றோர்களுக்குத் தங்களுடைய கொள்கைப் பித்துக்களைத் தங்கள் குழந்தைகள்மீது சுமத்துவதற்கு என்ன உரிமை?

இத்தகைய எண்ணங்கள் இடைவிடாது தோன்றிக் கொண்டிருந்தன. பின் இவற்றிற்கு நேர்மாருன எண்ணங்களும் உதயமாகும். நான் எனக்கு எவ்வித சிகிச்சை செய்து கொள்வேனே அதே சிகிச்சை என் புதல்வனுக்கும் செய்வது குறித்து ஆண்டவன் நிச்சயமாய் மகிழ்ச்சியே யடைவாரன்றே? எனக்கு ஜல வைத்தியத்தில் நம்பிக்கையுண்டு. வேறு வைத்தியத்தில் நம்பிக்கை யில்லை. டாக்டர்களேனும் குணப்படுத்தி விடுவதாக உறுதி கூறுகிருர்களா? இல்லை. அவர்களும் சோதனையே செய்கிருர்கள். உயிர் இருப்பதும் போவதும் ஆண்டவன் சித்தத்தைப் பொறுத்தவை. அவனை நம்பி, அவன் பெயரைச் சொல்லி எனக்குச் சரியான சிகிச்சை என்று தோன்றுவதை ஏன் கையாளக்கூடாது?

இவ்வாறு இருவகைப்பட்ட எண்ணங்களால் என் உள்ளம் அலைப்புற்றது. இரவு வேளை மணிலாலின் படுக்கையில் அவனுக்கருகில் படுத்துக் கொண்டிருந்தேன். ஒரு யோசனை தோன்றிற்று. எழுந்திருந்து ஒரு நீளமான துணியை நீரில் நனைத்துப் பிழிந்தேன், அதை அவன் உடல்மீது தலையைமட்டும் விட்டு விட்டுச் சுற்றினேன். தலையில் ஓர் ஈரத் துண்டைக் கட்டினேன். பின்னர் இரண்டு கம்பளிகளைப் போட்டுப் போர்த்தினேன் பழுக்கக் காய்ந்த இரும்புபோல்

உடம்பு கொதித்தது. ஒரே வறட்சியாயிருந்தது. வியர்வை கொஞ்சங்கூட இல்லை.

நிரம்பக் களைப்படைந்து போனேன். மணிலாலை, அவன் தாயாரைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு வெளியே சிறிது உலாவி விட்டு வரப் புறப்பட்டேன். சௌபாதி கடற்கரைக்குச் சென்றேன். மணி பத்தாயிற்று. இரண்டொருவரே அங்கு உலாவிக் கொண்டிருந்தனர். ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தபடியால் அவர்களை நான் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. 'ஆண்டவனே! இந்தச் சோதனை நேரத்தில் என் மானங்காத்தல் நினது பொறுப்பு" என்று பிரார்த்தித்தேன். என் உதடுகள் இராம நாமத்தை ஜபித்தவண்ணமிருந்தன. சிறிது நேரம் உலாவிய பிறகு வீடு திரும்பினேன். ஹிருதயம் "பட் பட்", என்று அடித்துக் கொண்டிருந்தது.

அறையில் நுழைந்ததும் மணிலாலின் குரல் கேட்டது. "பாபு வந்துவிட்டீர்களா?" என்றான்.

"ஆம் கண்மணி!"

"தயவுசெய்து என்னை எடுத்துவிடுங்கள். உடம்பு எரிகிறது."

"குழந்தாய், வியர்வை வியர்த்திருக்கிறதா?"

"வியர்வையில் முழ்கியிருக்கிறேன். தயவு செய்து உடனே எடுத்து விடுங்கள்."

நெற்றியைத் தொட்டேன். வியர்வை முத்து முத்தாய்த் துளித்திருந்தது. உஷ்ணம் குறைந்து கொண்டிருந்தது. ஆண்டவனுக்கு நன்றி செலுத்தினேன்.

"மணிலால்! இனி, சுரம் நிச்சயமாகக் குணமாய்விடும். இன்னும் சிறிது வியர்க்கட்டும். எடுத்து விடுகிறேன்" என்றேன்.

'அப்பா! வேண்டாம். தயவுசெய்து இந்த உலைக்களத்திலிருந்து இப்போது என்னை எடுத்து விடுங்கள். வேண்டுமானால் அப்புறம் ஒரு முறை ஈரத்துணி சுற்றலாம்."

வேறு விஷயங்களைப் பற்றிப் பேச்சுக் கொடுத்துக்கொண்டே இன்னும் சில நிமிஷங்கள் அப்படியே வைத்திருந்தேன். நெற்றியி

லிருந்து வியர்வை அருவியாக ஓடிற்று. பின்னர் போர்வைகளையும் ஈரத் துணியையும் எடுத்துவிட்டு உடம்பைத் துடைத்தேன். அப்படியே தந்தையும் மகனும் ஒரே படுக்கையில் படுத்துத் தூங்கிவிட்டோம்.

கட்டையைப்போல் இருவரும் தூங்கினோம். மறுநாள் காலையில் சுரம் நிரம்பவும் குறைந்துவிட்டது. இவ்வாறே பாலும் பழச்சாறும் மட்டும் அருந்தி 40 நாள் காலம் கழித்தான். ஆனால் அன்றைக்குப்பின் எனக்குப் பயம் போய்விட்டது. அது பெரும் பிடிவாதமான சுரமாயினும், அதைக் கட்டுக்குள் கொண்டு வந்தாய் விட்டது. இன்று என் புதல்வர்களுக்குள் மணிலாலே தேக சுகத்தில் சிறந்தவனாயிருக்கிறான். அவன் குணமடைந்ததற்குக் காரணம் ஆண்டவன் கருணையா, ஜல சிகிச்சை முறையா, கவலையுடன் உணவு கொடுத்துப் பணிவிடை செய்து வந்ததா என்று யாரால் சொல்லமுடியும்? ஒவ்வொருவரும் தத்தம் நம்பிக்கைக்கேற்ப முடிவு செய்வார்களாக. என் வரையில், ஆண்டவன் என்மானத்தைக் காப்பாற்றினார் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. அந்நம்பிக்கை இன்றளவும் மாறாமலே இருந்து வருகிறது.

I. பொருள் கூறுக:—

*வைசூரி, அபிப்பிராயம், இறைச்சி,*

II. வாக்கியங்களில் அமைக்க:—

*முறைகளைக் கையாண்டு, பரிசோதித்து, வேண்டுகோள், அபிப்பிராயத்தை.*

III. விடை எழுதுக:—

1. *மகாத்மா காந்தி ஏன் அமைதியான வாழ்க்கையை நடத்த முடியவில்லை?*
2. *மணிலால் யார்?*
3. *டாக்டர் மணிலாலுக்கு எவற்றைக் கொடுக்க வேண்டுமென்றார்?*
4. *மகாத்மா காந்தி டாக்டர் கூறியவற்றை ஏன் கொடுக்கவில்லை?*
5. *மகாத்மா காந்தி எவற்றைப் பரிசோதிக்க டாக்டர் உதவியை நாடினார்?*

6. காந்தியின் உள்ளத்தில் தோன்றிய இருவகைப்பட்ட எண்ணங்கள் யாவை ?

7. காந்திக்குத் தோன்றிய யோசனை யாது ?

8. இப்பாடத்தினுல் அறியும் உண்மை யாது ?

# 9. இந்திய விவசாயிகள்

இந்தியா ஒரு விவசாய நாடு. அதில் நகரங்கள் சில; கிராமங்கள் பல. மக்களில் பெரும் பகுதியினர் கிராமங்களிலேயே வாழ்கின்றனர். அவர்கள் விவசாயத்தையே நம்பியிருக்கின்றனர். கைத்தொழில் செய்வோரும், வர்த்தகம் நடத்துவோரும், உத்தியோகத்தில் அமர்ந்திருப்போரும் உழுது பயிர்செய்யும் உழவரையே நாடுகின்றனர். இதனுல்தான், பொய்யாமொழியாரும்,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்,,

என்று உழவரைச் சிறப்பித்துள்ளார். எனவே, இந்திய நாட்டின் செல்வ நிலை கிராமங்களின் செல்வ நிலையைச் சார்ந்துள்ளது என்பது வெள்ளிடை மலை.

விவசாயிகள் வறுமை நிலைக்குக் காரணங்கள் எவை ? விவசாயிகள் துண்டு துண்டான நிலங்களை வைத்துள்ளனர். சகோதரர் பாகப் பிரிவினை காரணமாக நிலம் பங்கிடப்படுவதால் சில ஆண்டுகளுக்குப் பின் ஒவ்வொருவருக்கும் கிடைக்கும் பங்கு குறைந்து கொண்டே போகிறது. பம்பாய் மாகாணத்தில் 1916-ஆம் ஆண்டில் அரை ஏகருக்கும் குறைந்த பரப்புள்ள நிலம் இருபது பங்குகளுக்குமேல் பிரிக்கவேண்டியிருந்ததாக அம்மாகாண விவசாய இலாகா டைரக்டர் குறிப்பிட்டுள்ளார். ஒவ்வொருவருக்கும் எவ்வளவு கிடைக்குமென நினைத்துப் பாருங்கள்! மேலும் ஒருவனுக்குச் சொந்தமான துண்டு துண்டான நிலங்கள் தொலைவில் இருப்பதாலும், நீர்ப்பாசன வசதியற்றிருப்பதாலும் கரம்பாய் விடப்படுகின்றன. சிறிய நிலத்தை உடையவர்கள் எங்ஙனம் புதிய விவசாயக் கருவிகளை வாங்கக் கூடும் ? நல்ல எருக்களை எவ்வாறு பெறுவர் ? அவர்களுக்கு வேளாண்மையால் வயிறு வளர்க்கப் போதிய வருமானம் கிடைப்பதில்லை.

இக் குறையைப் போக்க மூன்று உபாயங்கள் உண்டு. அவை சிறு நிலங்களை ஒன்று சேர்த்தலும், குறித்த பரப்பிற்குக் குறைவாயுள்ள நிலத்தைப் பங்கிடக் கூடாதென விதித்தலும், பாகப் பிரிவினை பற்றிய சட்டங்களைத் திருத்தி யமைத்தலும் ஆகும். பஞ்சாப் மாகாணத்தில் துண்டு நில்ங்களை ஒன்று சேர்ப்பதற்கெனப் பல கூட்டுறவுச் சங்கங் கள் ஏற்படுத்தப்பட்டன. இம்முறையில் ஜலந்தர் என்ற கிராமத்தில் ஒரு முதலாளிக்குரிய இருநூறு துண்டு நிலங்கள் ஒன்றுகச் சேர்க்கப் பட்டன வென்று சர். எம். டார்லிங் என்பார் தமது "பஞ்சாப் வேளாளன்" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இதனுல் விவசாயிகள் புதிய முறைகளைக் கையாண்டனர்; கரம்பான நிலம் பயிரிடப்பட்டது. பிற மாகாணங்களில் இம்முறை திருப்திகரமான பலனை அளிக்க வில்லை.

கிராமவாசிகளின் எளிய நிலைக்கு அவர்களது கடன் சுமையும். காரணமாகும். நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானம் அதை நம்பி யிருப்போருக்குப் போதுமானதாயில்லை. கிராமவாசிகளுக்கு ஆண்டு முழுவதும் நிலத்தில் வேலை இல்லை. வேலையில்லாக் காலத்தை அவர் கள் வறிதே கழிக்கின்றனர். கைத்தொழிலைச் செய்து பிழைக்கவும் வகையறியாது வருந்துவர். மேலும் அவர்கள் மலேரியா, வைசூரி முத லிய நோய்களுக்கு இரையாகின்றனர். மழை தவறிய காலத்தில் மாடு களும் உணவின்றி நோய்வாய்ப்பட்டு மடிகின்றன. கிராம மக்கள் தங்கள் வறுமை நிலையைப் பொருட்படுத்தாது கடன் வாங்கியேனும் திருமணம், இழவு முதலிய சடங்குகளைச் செய்வதில் பெருந்தொகை யைச் செலவிடுகின்றனர். மார்வாரிகளும், சவகாரிகளும், லேவா தேவிக் காரர்களும் அதிகவட்டிக்குக் கடன் கொடுத்தனர். கிராமவாசிகளும் எளிதில் கடனைப் பெற்றனர். பரம்பரையாகத் தகப்பனுர் கடன் பிள் ளைக்கும் வந்தது.

இந்திய சர்க்கார் கிராம மக்களின் கடனைக் குறைக்கப் பல முறைகளைக் கையாண்டு வந்தனர். வறகடம் நேர்ந்த காலத்தில் நில வரியைத் தள்ளிவிட்டனர். மக்கள் பொருளைச் சேமிப்பதற்கெனச் சேமிப்பு நிலையங்கள் தோன்றின. லேவாதேவிக்காரர் விவசாயிகளின் கருவிகளையும், மாடுகளையும் அபகரிக்கக் கூடாதெனப் புதிய சட்டங் கள் ஏற்படுத்தப் பட்டன. கடனைப் பலதவணைகளில் கட்ட ஏற்பாடு

கள் செய்யப்பட்டன. நாடெங்கும் ஐக்யநாணயச் சங்கங்களும், நில அடமான நிதிகளும் நிறுவப்பட்டன.

சென்னை சர்க்கார் கிராம மக்களின் கடனைக் குறைக்கச் சில முறைகளைக் கையாண்டனர். முதற்கண் முதலையே குறைப்பதற்காக 1935-ஆம் ஆண்டில் சென்னைக் கடனாளிகளின் பாதுகாப்புச் சட்டம் அமுலுக்கு வந்தது. அது ஐந்நூறு ரூபாய்க்குக் குறைவாய்க் கடன் வாங்கியவர்களுக்கு நன்மை செய்தது: கடன்காரர் வாங்கவேண்டிய வட்டி விகிதத்தை நிர்ணயித்தது; அவர்கள் கணக்குகளையும் தகுந்த முறையில் வைக்க வேண்டுமென வற்புறுத்தியது. மேலும் பழங்கடன்களைத் தீர்க்க 25 லட்சம் ரூபாய் கொடுத்து உதவி செய்தது. 1936-ஆம் ஆண்டில் சென்னைக் கடன் சமரசச் சட்டத்தின் படி "கடன் சமரசக் குழுக்களை" நாட்டில் பல விடங்களில் அமைத்தனர். அவை விவசாயிகளின் கடன்களை வலியச் சென்று தீர்த்துவைத்தன. 1932-அக்டோபர் மாதம்வரை கொடுக்கவேண்டிய வட்டித்தொகை தள்ளுபடி செய்யப்பட்டது. வாங்கிய கடன் தொகையைப் போல் இருமடங்கு தொகையை வட்டியாகவோ அசலாகவோ செலுத்தியிருந்தவர்கள், கடன் தொகையை முற்றிலும் கொடுத்தவராகக் கருதப்பட்டனர்.

லேவாதேவிக்காரர்கள் சர்க்கார் கொடுக்கும் உரிமைச் சீட்டைப் பெற்றே தங்கள் தொழிலைச் செய்ய வேண்டுமென்றும், குறித்தபடி கணக்குகளை வைக்கவேண்டுமென்றும், குறிப்பிட்ட விகிதம் தான் வட்டி வாங்க வேண்டுமென்றும் சட்டங்கள் தோன்றின.

சுருங்கக்கூறின், கிராம மக்கள் நன்னிலையடைய வேண்டும். அவர்கள் அதிகப் பரப்புள்ள நிலத்தைப் பெற்று, நவீன முறைப்படி பயிர்த் தொழில் செய்து, ஊதியம் பெறவேண்டும். அவர்கள் கூட்டுறவுச் சங்கங்களின் உதவியால் பொருளை விற்று லாபம் சம்பாதிக்க வேண்டும். அவர்கள் காலத்தை வீணாக்காமல் ஏதேனும் தொழில் செய்ய வேண்டும். கிராம மக்கள் பொருளாதார நிலை உயர்ந்தால், இந்திய நாடு சீரும் சிறப்பும் பெற்று விளங்கும்.

## பயிற்சி

I. பொருள் கூறுக :—

*வறுமை, வைசூரி, வற்கடம்*

II. வாக்கியங்களில் அமைக்க :—

*நிறுவு, முதற்கண், சமரசம், பொருளாதாரம்.*

III. விடை எழுதுக :—

(அ) *இந்தியாவின் செல்வ நிலை கிராமங்களின் செல்வ நிலையைச் சார்ந்தது ஏன்?*

(ஆ) *நிலத்தைப் பங்குபோடுதல் — இதனைக் குறைப்பதற்குரிய வழிகள் யாவை?*

(இ) *விவசாயிகள் கடன்படக் காரணமென்ன?*

(ஈ) *சென்னைச் சர்க்கார் விவசாயிகளின் கடன் தொல்லையைக் குறைக்க என்ன ஏற்பாடுகள் செய்தனர்?*

# 10. ஐக்கிய நாட்டுச்சங்கம்

போர் என்றாலே பயமாயிருக்கிறது. அரை வயிற்றுக்குக்கூட உணவு இல்லை; குடியிருக்கவும் வீடு கிடைப்பதில்லை; உடுக்கும் உடையும் விலையும் ஏறி விடுகிறது. மக்கள் யாது செய்வர்? போரில் தொண்டாற்றத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிகின்றான். வீட்டில் இருந்தாலும் பயம்; வெளியே சென்றாலும் பயம்; பகலிலும் பயம்; இரவிலும் பயம். விமானத் தாக்குதலைத் தெரிவிக்கும் எச்சரிக்கைச் சங்கு எப்பொழுது வேண்டுமாயினும் கேட்கும். பகைவர் குண்டுமாரி பொழிவதற்குக் காலம் பார்ப்பதில்லை. என்று தணியும் இந்தப் போர் என ஏங்கியிருப்பர் மாந்தர்.

உலகத்தில் இரண்டு யுத்தங்கள் நடந்தன. அவை மக்களின் சுக வாழ்க்கையைக் கெடுத்தன. ஆடவரும் பெண்டிரும் போரை ஒழிக்க முயன்றனர். இந்திய சரித்திரத்தைப் பார்த்தால் யுத்தங்களின் குறிப்பாகக் காணப்படுகிறது. ஒரு பக்கத்தில் பானிபட் சண்டை; மற்றொரு பக்கத்தில் பிளாசி சண்டை; ஒரு நாட்டில் மத சம்பந்தமான போர்; மற்றொரு நாட்டில் பொறாமை, பேராசை காரணமாகப் போர்.

போரை ஒழிக்க, 1945-ஆம் ஆண்டில் ஏப்ரல் மாதம் ஸன் பிரான்ஸிஸ்கோ நகரில் ஐக்கிய நாடுகளின் மா நாடொன்று கூடிற்று. ஐம்பது நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் வந்திருந்தனர். இம் மாநாட்டில் ஐக்கிய நாடுகளின் சாஸனம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. பின்வரும் சந்ததியாரைப் போர் தொடராவண்ணம் அதனை அறவே ஒழிப்பதையும், நாடுகளும் மக்களும் தமக்குள் ஏற்படும் சிக்கல்களைச் சமாதான வாயிலாகத் தீர்த்துக் கொள்வதையும், சிறு நாடுகளுக்கும் பெரிய நாடுகளுக்கும் சம உரிமை வழங்குதலையும், ஜாதி நிறம் பால் வேற்றுமைகள் கருதாது மக்கள் உரிமைகளையும் சுதந்திரத்தையும் பாதுகாப்பதையும் சீரிய நோக்கங்களாகக் கொண்டு இந்த ஐக்கிய நாடுகளின் சங்கம் அமைக்கப்பட்டது.

இது பொதுக் கழகம், பாதுகாப்புக் கழகம், பொருளாதார, சமூகக் கழகம், தர்மகர்த்தா கழகம், சர்வதேச நீதிமன்றம், காரியாலயம் என்ற ஆறு கிளைக் கழகங்களையுடையது. போரும் இரத்தப் பெருக்க

மும் இன்றி அமைதியாகவே எல்லாவித சிக்கல்களையும் தீர்ப்பதே இவைகளின் அலுவலாகும். பாலஸ்தீனத்தைப்பற்றி யூதர்களுக்கும் அராபியர்களுக்கும் ஏற்பட்ட வழக்கையும், டச்சுக்காரர்களுக்கும் இந்தோனேஷியாவில் உள்ளவர்களுக்கும் ஏற்பட்ட சிக்கலையும் இது தீர்த்து வைத்தது. இது இந்தியாவிற்கும் பாகிஸ்தானத்திற்கும் ஏற்பட்டிருக்கும் தகராறுகளையும் தீர்த்துக் கொண்டிருக்கிறது.

இந்த ஐக்கிய நாட்டுச் சங்கம் உலக மக்களின் பெரும்பேருக அமைந்துள்ளது. ஒவ்வொரு ஆண்டிலும் அக்டோபர் மாதம் **24**-ம் தேதி ஐக்கிய நாட்டுச் சங்கத்தின் நாளாக உலகமெங்கும் கொண்டாடப் படுகிறது. இச்சங்கம் நீடூழி வாழ்க! இதன் சீரிய நோக்கங்கள் எங்கும் பரவுக!

யாதும் ஊரே, யாவரும் கேளிர்!

### பயிற்சி

1. *போரினுல் ஏற்படும் தீமைகள் யாவை ?*
2. *ஐக்ய நாட்டுச் சங்கத்தின் நோக்க மென்ன ?*
3. *அதன் கிளைக் கழகங்கள் யாவை ?*
4. *அது செய்த நன்மைகள் யாவை ?*